*Cēcunātaruṭaiya tiru irutayattūtaṉ*
*Tokuti 69, pakuti 7*
*July 1956*

Record no. 2689

# அறிவிப்பு

## இலங்கை சந்தாதாருக்கு

நேயர்கள் தூதன் சந்தாவை மட்டும் இலங்கையிலேயே கீழ்க் கண்ட விகிதப்படி கட்டிவிடலாம். ஆனால், நன்றியறிந்த தோஸ்திரம், மரண அறிக்கை, விளம்பரம் முதலிய மற்ற விபரங்களுக்கெல்லாம் கடிதமும் பணமும் மதுரை ஆபீஸுக்கே அனுப்பவேண்டும்.

இலங்கை விலாசம்: REV. FR. R. CHIRIATTI, S. J.
St. Aloysius' College,
GALLE.

சந்தா விகிதம்:
- திரு இருதயத் தூதன் ரூ. 2-50
- தூதனும் சத்தியாபிமான வெளியீடும் ரூ. 4-00

## தூதனில் பிரசுரிக்க கட்டண விகிதம்

1. விளம்பரங்களுக்கு — 1 தடவை பிரசுரிக்க
(தூதன் அட்டைப் பக்கம் தவிர)
- $\frac{1}{2}$ பக்கம் ... ரூ. 15/-
- முழுப் பக்கம் ... ரூ. 25/-

2. மரண அறிக்கைக்கு — 1 தடவை பிரசுரிக்க
(தூதன் அட்டைப் பக்கம் தவிர)
- $\frac{1}{2}$ பக்கம் ... ரூ. 10/-
- முழுப் பக்கம் ... ரூ. 20/-

## நன்றியறிந்த தோஸ்திரம்

நன்றியறிந்த தோஸ்திரங்கள் பிரசுரிப்பதற்கு குறிப்பிட்ட கட்டணம் யாதொன்றும் இல்லை. நேயர்கள் அனுப்புவதை காணிக்கையாகப் பெற்றுக்கொண்டு சுருக்கமாகப் பிரசுரிக்கப்படும்.

குறிப்பிட்ட மாத இதழில் பிரசுரிக்கப்படவேண்டிய விளம்பர அறிக்கைகள் அதற்கு முந்திய மாதம் 10-ம் தேதிக்குள் முன் பணத்துடன் நமது காரியாலயம் வந்து சேரவேண்டும்.

தூதன் முகவரி இது ஒன்றேதான்.
மானேஜர்
திரு இருதயத்தூதன் காரியாலயம்
செயின்ட் மேரீஸ், P. B. 56, மதுரை

தொகுதி 69 பகுதி 7



# சேசுநாதருடைய திரு இருதயத் தூதன்

உம்முடைய இராச்சியம் வருக!

ஜுலை 1956

## திரு இருதயத்தூதன்

(ஜெப அப்போஸ்தல சபை மாதாந்தரப் பத்திரிகை)

### சந்தா விபரம்

| தபாற் செலவு உட்பட வருட சந்தா | இந்தியா | | வெளி நாடு | |
|---|---|---|---|---|
| | ரூ | அ | ரூ. | அ |
| தூதன் மட்டும் ... | 2 | 0 | 2 | 10 |
| தூதனும் கத். சத்தியாபிமான சபையின் வெளியீடும் ... | 3 | 8 | 4 | 6 |
| கத். சத்தியாபிமான வெளியீடு மட்டும் ... | 2 | 8 | 3 | 0 |
| தூதன்சந்தாதாருக்கு தேவரகசிய சீட்டுகள் (30 கொண்ட) செட் | 1 | 0 | 1 | 8 |

"தூதன்" தனிப் பிரதி 3 அணா
(தபாற் செலவு தனி)

## பொருளடக்கம்



செயின்ட் மேரீஸ்
த. பெ. 56, மதுரை
1956

# ஜூலை மாதம்



**பொதுக்கருத்து**

உடற்பயிற்சி, விளையாட்டுக்கள்
கிறீஸ்துவ நெறிப்படி
நிறைவேறுதல்

**வேதபோதகக் கருத்து**

ஆப்பிரிக்காவில் நாஸ்தீக
லோகாதய ஆபத்து
அகலுதல்

## சேசுநாதருடைய திரு இரத்தத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட மாதம்

| இங். தேதி | நாள் | | தமிழ் தேதி | பூசை ஆய. | திருநாட்கள் | நிருபம் | சுவிசேஷம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | ஞா | | 18 | சி | ✠ இஸ். திரு. பின் 6-ம் ஞாயிறு. சேசுநாதருடைய திரு இரத்தத்தின் திருநாள். | எபி. 9 : 11-15 | அரு. 19 : 30-35 |
| 2 | தி | ஆனி-மீ | 19 | வெ | தேவமாதா எலிசபெத்தம்மாளை மினவின திருநாள். | உந்நத சங். 2: 8-14 | லூக். 1 : 39-47 |
| 3 | செ | | 20 | வெ | ** அர்ச். சிங்கராயர், (வெ. அர்ச். பெர்னுர்டின் ரியாலினே | 1 இரா.5:1-4;10-11 | மத். 16 : 13-19 |
| 4 | பு | | 21 | பச் | ** அர்ச். பெர்த்தா, வி. [சே.ச. 1அரு.2:1-6;4:10 மத்.11:25-30 | உரோ. 6 : 3-11 | மாற். 8 : 1-9 |
| 5 | வி | | 22 | வெ | அர்ச். சக்கரியா மரிய அந்தோனியார், ஸ்து. | 1 திமோ. 4 : 8-16 | மாற். 10 : 15-21 |
| 6 | வெ | | 23 | பச் | ➤ ** (வெ. தலை வெள்ளி) அர்ச். மரியா கொரற்றி, க. வே. †† | உரோ. 6 : 3-11 | மாற். 8 : 1-9 |
| 7 | ச | | 24 | வெ | அர்ச். சிரிலும், மெதோடியசும், மே. வே. †† | எபி. 7 : 23-27 | லூக். 10 : 1-9 |
| 8 | ஞா | ● | 25 | பச் | ✠ இஸ். திரு. பின் 7-ம் ஞா. அர்ச். எலிசபெத்தம்மாள். | உரோ. 6 : 19-23 | மத். 7 : 15-21 |
| 9 | தி | | 26 | பச் | ** அர்ச். வெரோணிக்கா. அர்ச். அற்புதமாதா. | உரோ. 6 : 19-23 | மத். 7 : 15-21 |
| 12 | வி | | 29 | வெ | அர்ச். குவால்பெர்த் அருளப்பர், ம. | சர்வப். 45 : 1-6 | மத். 5 : 43-48 |
| 13 | வெ | | 30 | சி | ➤ ** அர்ச். அனக்கிலேத்தப்பர், பா. வே. | 1 இரா. 5:1-4;10-11 | மத். 16 : 15-19 |
| 14 | ச | | 31 | வெ | அர்ச். பொனவெந்தூர், மே. ஸ்து. வே. | 2 திமோ. 4 : 1-8 | மத். 5 : 13-19 |
| 15 | ஞா | ஆடி-மீ | 32 | பச் | ✠ இஸ். திரு. பின் 8-ம் ஞா. அர்ச். ஹென்றி, சக்கரவர்த்தி. (முத். இஞ்ஞாசி அசுவேதோ, துணை. வே. சே. ச.) | உரோ. 8 : 12-17 | லூக். 16 : 1-9 |
| 16 | தி | | 1 | வெ | அர்ச். உத்தரியமாதா திருநாள். | சர்வப். 24 : 23-31 | லூக். 11 : 27-28 |
| 17 | செ | | 2 | வெ | ** அர்ச். அலெக்சிஸ், ஸ்து. | 1 திமோ 6 : 6-12 | மத். 19 : 27-29 |
| 18 | பு | | 3 | வெ | அர்ச். கமில்லஸ் தெ லெல்லிஸ், ஸ்து. | 1 அரு. 3 : 13-18 | அரு. 15 : 12-16 |
| 19 | வி | | 4 | வெ | அர்ச். வின்சென்ட் தெ பவுல், ஸ்து. | 1 கொரி. 4 : 9-14 | லூக். 10 : 1-9 |
| 20 | வெ | | 5 | வெ | ➤ அர்ச். எரோணிமூஸ் எமிலியானி, ஸ்து. | இசை. 58 : 7-11 | மத். 19 : 13-21 |
| 21 | ச | | 6 | வெ | ** அர்ச். பிராக்சேதம்மாள், க. | சர்வப். 24 : 14-16 | லூக். 11 . 27-28 |
| 22 | ஞா | ○ | 7 | பச் | ✠ இஸ். திரு. பின் 9-ம் ஞா. அர்ச். மரியமதலேனம்மாள், த. † | 1 கொரி. 10 : 6-13 | லூக். 19 : 41-47 |
| 23 | தி | | 8 | சி | அர்ச். அப்போலினர், மே. வே. | 1 இரா. 5 : 1-11 | லூக். 22 : 24-30 |
| 24 | செ | | 9 | பச் | ** அர்ச். கிறிஸ்தினுள், க. வே. | 1 கொரி. 10 : 6-13 | லூக். 19 : 41-47 |
| 25 | பு | | 10 | சி | அர்ச். சந்தியாகப்பர், அப். | 1 கொரி. 4 : 9-15 | மத். 20 : 20-23 |
| 26 | வி | | 11 | வெ | அர்ச். அன்னம்மாள், தேவமாதாவின் தாயார். | பழமொ. 31: 10-31 | மத். 13 : 44-52 |
| 27 | வெ | | 12 | பச் | ➤ ** அர்ச். பந்தலெயோன், வேத. (சி. முத். ருடால்பும் துணைவரும், வே. சே. ச. காட்சி. 7 : 13-17 லூக். 21 : 9-19) | 1 கொரி. 10 : 6-13 | லூக். 19 : 41-47 |
| 28 | ச | ஆடி-மீ | 13 | வெ | ** அர்ச். நசாரியுசும், செல்சும், துணைவர்களும், வேதசாட்சி. | சர்வப். 24 : 14-16 | லூக். 11 : 27-28 |
| 29 | ஞா | | 14 | பச் | ✠ இஸ். திரு. பின் 10-ம் ஞா. அர்ச். மார்த்தம்மாள், க. | 1 கொரி. 12 : 2-11 | லூக். 18 : 9-14 |
| 30 | தி | | 15 | பச் | ** அர்ச். அப்தென், சென்னென், வே. | 1 கொரி. 12 : 2-11 | லூக். 18 : 9-14 |
| 31 | செ | | 16 | வெ | அர்ச். இஞ்ஞாசியார், ஸ்து. சே. ச. † | 2 திமோ. 2 : 8-10; 3 : 10-12 | லூக். 10 : 1-9 |

குறிப்புகள் :— ✠ = கடன் திருநாள். * = கறுப்பு ஆயத்தம் தரிக்கலாம்.
➤ = சுத்த போசனம். ** = கறுப்பு ஆயத்தமாவது வேறு நிற ஆயத்தமாவது தரிக்கலாம்.
† = செப அப்போஸ்தல சபை விருத்தியாளருக்கு பரிபூரண பலன்.
†† = செப அப்போஸ்தல சபை எல்லோருக்கும் பரிபூரண பலன்.

# வாழ்க இஞ்ஞாசியே!

1. பம்பலூனாவெனும் போர்க்களத்தில்—முன்
பெரிதாய் வளர்ந்த பெருமையுமே
நம்பிடா விதமாய் விழுந்ததுவே—அவர்
நாளைப் படுக்கையில் கழித்தனரே.
எம்பிரான் யேசுவின் புனிதர்களின்—வீர
எழிலுறு வாழ்வை வாசித்தவர்
தெம்புடன் தெளிவுறும் உறுதிகொண்டு—உயர்
தூயரின் வழிக்கு எழுந்து வந்தார்.

2. மன்றிரேசாவெனும் குகைதனிலே—விதை
மறைந்து மங்கிற்று மண்ணினிலே
உன்னவும் அஞ்சிடும் தபசுகளே—அவர்
உளத்தின் குருதியை ஊட்டினவே
கன்னியின் கனிவுறு காட்சிகளும்—அங்கு
கரும்பினும் இனியநீர் ஊற்றினவே.
அன்பிலும் அறத்திலும் வேரூன்றி—அந்த
அரியா விதையும் முளைத்திட்டது.

3. ஞாலமும் புகழ்ந்திடும் நல்லுரைகள்—கொண்ட
ஞான முயற்சிகள் எழுதினவர்
காலமும் திருச்சபைத் தேவைகளும்—தேடிய
சேசுவின் சபையை நிறுவினவர்
சீலம் அழித்திட செருக்குடனே—எங்கும்
சென்ற பணியா பதிதத்தையே
காலடி பணியும் கீழ்ப்படிதலின்—புனித
காலில் வைத்து நசுக்கினரே.

4. இந்திய உள்ளம் சேசுவிடம்—சேர
இனிய நண்பர் சவேரியாரை
சிந்தனைச் செல்வர் தேநொபிலியை—சான்றோர்
பெஸ்கி பிரிட்டோ அனுப்பினரே.
செந்தீ உள்ளத்தில் எரிந்திடவே—அவரிடம்
"சென்று தீ பரப்புக" என்றனரே
எத்திசை எவர்க்கும் உழைத்தனரே—வாழ்க
எந்தை இனிய இஞ்ஞாசியே!

பெஸ்கி — விஞ்ஞா






## உடற் பயிற்சி, பந்தய விளையாட்டுக்கள், கிறீஸ்துவ உண்மைகளின் உறுதுணை பெறுதல்

வி. மி. ஞா.

### பாரி என்ற வள்ளல்

முல்லைக் கொடி ஒன்று தனியே தரையில் படர்ந்துகொண்டிருந்தது. பல்லைக் காட்டும் அந்த முல்லையின் சிரிப்பைப் பலர் கண்டு மகிழ்ந்து சென்றனர். பாரி ஒருவனே தான் மகிழ்ந்தபின், நின்றான், நினைத்தான். முல்லையின் எதிர்கால நிலையைப்பற்றி நினைத்தான். அது தரையில் படர்ந்து, வெயிலில் காய்ந்து வெந்துவிடாமல், தனது தேரை அங்கு நிறுத்தினான். கொடியை எடுத்து, தேரின் துணைகொண்டு வளர வழி செய்தான்.

இன்றைய உலகத் தோட்டத்தில் மக்கள் மனதை மிகவும் கவர்ந்துள்ள முல்லை, உடற் பயிற்சிக் கலை. அது எல்லா நாடுகளையும், எல்லா உள்ளங்களையும் ஈர்க்கின்றது. ஆனால் ஒரு கட்டுப்பாடு இன்றி, பற்றுக்கோல் இன்றித் தரையில் கிடக்கின்றது. இதைக் காணும் நமது தலைவர், பாப்பானவர் உடற் பயிற்சிக் கலையின் பயனை, அழகை அங்கீகரிக்கிறார். ஆனால் அந்தப் பயனும் அழகும் அழிந்துவிடாமலிருக்க, உறுதுணையாக உயர்ந்த ஒரு தேர் அளிக்கிறார். அத்தேர் உயர்ந்த கிறீஸ்துவ உண்மைகள்.

அன்றைய பாரியை வாழ்த்தும் தமிழர், இன்றைய பாப்புவை வாழ்த்தவேண்டும். இம்மாதம் அவர் கூறும் கருத்தை வரவேற்று செயற்படுத்த வேண்டும்.

### உடலின் பெருமை

நமது உடல் பல விலங்குகளின் உடலைவிடத் திண்மையில், வலிமையில், உருவத்தில் சிறியது. என்றாலும் விலங்குகளின் உடல் மனித உடலுக்குத் தலைவணங்கவேண்டும். பலப்பல தாவர வகைகளும், விலங்குகளும் மனித உடலுக்கு பயன்படவே உண்டாக்கப்பட்டன.

படைப் பொருள்களின் பெருகிய குணங்களை சுருங்கிய அளவில் தன்னுள்ளே கொண்டுள்ள கண்ணடி மனித உடல். இதற்குக் காரணம் மனித ஆத்துமம். இறைவன் சாயலில் உண்டாக்கப்பெற்ற ஆன்மா, உடலின் ஒத்துழைப்பைத் தேடுவதால், உடலுக்கு இத்துணை பெருமை.

இது இயற்கையைச் சார்ந்த பெருமை. இயற்கையைக் கடந்த பெருமையும் உண்டு. கிறீஸ்துவ மறையில், நமது உடல், ஞான நீராட்டலில் (ஞானஸ்நானத்தில்) திருத்துவக் கடவுளின் திருக்கோயிலாகி விட்டது.

## உடலின் சிறுமை

இதே மனித உடல் இன்றிருந்து நாளை மறையும் தன்மைகொண்டது; நோய்களின் அடைக்கலமானது; நன்மையை விலக்கி, தீமையைத் தேடும் சிறுமையுடையது. நான் எனது மனதால் உயர்ந்ததை விரும்ப, எனது உடலில், ஆன்மாவுக்கு முரண்பட்ட சட்டம் இருப்பதை உணருகிறேன் என்ருர் புனித சின்னப்பர். நமது உடலின் இந்தப் போராட்ட நிலைக்குக் காரணம், மனுக்குலத்தின் முதற் பாவம். அப்பாவத்தால் நமது உடல் ஆன்மாவுக்குக் கீழ்ப்படிந்திருக்க மறுக்கிறது. தனது மனதின்படி நடக்க, ஊதாரிப் பிள்ளையாய் வெளியேறத் துடிக்கிறது.

## பயிற்சி, பந்தயம்

முரண்பட்ட குணமுடைய உடலுக்கு பயிற்சியும், பந்தயமும் முரண்பட்ட விளைவுகள் விளைவிக்கலாம். நன்மையும் தரலாம், தீமையும் தரலாம். உடற் பயிற்சியால் உடல் வலிமை பெறும். உடல் வலிமை பெற, உள்ளம் வளரும். உள்ளம் வளர இறையன்பு வளரும். நல்ல முறையில் நடக்கும் பயிற்சியும், பந்தயமும், இறைவனடிக்கு விரைந்து ஓடும். தகாத முறையில் நடக்கும் பயிற்சி, கடவுளின் கட்டளைகளை மறந்து, கட்டுப்பாடின்றித் திரிந்து, ஆத்தும கேட்டையும், உடல் நோயையும் பெற்றுக்கொள்ளும்.

உடற் பயிற்சிக் கலை ஒரு வழிதான், கதியல்ல. உடலுக்கும் ஆத்துமத்திற்கும் உதவி செய்யும் வழியாகிய அது, நமது உயர்ந்த கதியான கடவுள் ஊழியத்திற்கு உதவி செய்தல் வேண்டும். அதற்கேற்ற முறையில் உடற் பயிற்சியை நாம் மாற்றி அமைக்க வேண்டும். அளவின்றி வளரும் உடற் பயிற்சிக் கலைக்காக நாம் நமது கதியை, கடமையை மாற்றிவைக்க முடியாது. தலைக்கேற்ற குல்லா, குல்லாவுக்கேற்ற தலையல்ல.

## உயர்ந்த உறுதுணை

உடற் பயிற்சிக் கலை தகுந்த அளவில் நல்ல நிலையில் வளர உதவி செய்வது கிறீஸ்துநாதரின் கொள்கையே. ஒருவன் உலகத்தையெல்லாம் தன் ஆதாயமாக்கிக் கொண்டாலும், தன் ஆத்துமத்தை இழந்துவிட்டால் அதனுல் அவனுக்குப் பயன் என்ன? உன் கண் உனக்கு இடறலாயிருந்தால் அதை நீ பிடுங்கி எறிந்துவிடு—என்றவை போன்ற நமது ஆண்டவரின் அறிவுரைகள் உடற் பயிற்சிக்கு உதவி செய்யும். ஆன்மாவுக்கு எவ்வளவு பயன்படுகிறதோ, அவ்வளவு அவற்றைக் கையாடவேண்டும் என்ற ஒழுங்குக்கு கிறீஸ்துவின் கொள்கை நம்மை அழைத்துவரும்.



இவ்வொழுங்கின்படி நடக்கும் உடற் பயிற்சிக் கலை, உடலே கதி, உடல் அழகைப் போற்றுவதே மனிதனுக்கு அழகு என்ற பிழைபட்ட எண்ணத்திற்கு இடந்தராது; ஆத்தும கடமைகளை—உதாரணமாக ஞாயிறு பூசை, ஞாயிறு ஓய்வு முதலியவற்றைக் கைவிடச் செய்யாது; குடும்பக் கடமைகளை குப்பையில் தள்ளிவிடாது; இறை வழிபாட்டிற்கு இழுக்கு உண்டாக்காது.

## மண்ணைப் பொன்னுக்க

உடற் பயிற்சி, பந்தய விளையாட்டுக்கள் சாதாரண மனித செயல்கள். அதற்குக் கிறீஸ்துவக் கொள்கை கொடுக்கும் உயர்ந்த கதிதான் அதற்கு உயர்ந்த மதிப்புத் தருகின்றது. சாதாரண மண்ணைப் பொன்னுக்குகிறது. தண்ணீர் குடித்தாலும், உணவு உண்டாலும் அவற்றைக் கடவுளின் மகிமைக்காகச் செய்யும்படி கூறுகிருர் புனித சின்னப்பர். அப்போது சிறுமைகொண்ட அச்செயல்கள் பரலோக பெருமை அடைகின்றன. இன்று உலகெலாம் பரவிக் கிடக்கும் உடற் பயிற்சிக் கலை கடவுளின் மகிமைக்காக நிகழுகின்றதா?

புனித சின்னப்பர் பந்தய விளையாட்டுக்களை வெறுத்தவரல்ல. அவற்றை நன்கு கவனித்துப் பயன்படுத்தினுர். பந்தயத்தில் பங்கு கொள்வோர் பலர்; ஆனுல் ஒருவனே பரிசு பெறுகிருன்—என்ற கருத்தைப் பந்தய விளையாட்டுக்களிலிருந்து பறித்தார். இறைவன் பணிக்குப் பயன்படுத்தினுர். உடல் வலிமை பெற உடற் பயிற்சி வேண்டும்; அவ்வாறே ஆத்துமம் வலிமை பெற, ஞான முயற்சி வேண்டும் என்ருர் புனித இஞ்ஞாசியார், தமது 'ஞான முயற்சிகள்' என்ற நூலில்.

இவ்வாறு கிறீஸ்துவ மறையில் உடற் பயிற்சி ஒரு அமர நிலை அடைந்துவிட்டது எனலாம். அதனுல் நாம் அதை இறைவனுக்குரிய திருப்பணியாகக் கருதி, தகுந்த அளவில் பயன்படுத்தவேண்டும். அக்கலையை சேசுவின் இதயத்துக்குகந்த நறுமணத் தூபமாகச் செலுத்தவேண்டும்.

தரையில் கிடந்து மடிந்துகொண்டிருக்கும் உடற் பயிற்சிக் கலை என்ற முல்லைக் கொடி கிறீஸ்துவக் கொள்கை என்ற தேரின் உறுதுணை பெறுக! மக்களுக்கும், சேசுவின் உள்ளத்திற்கும் மகிழ்ச்சி தருக!




## ஆப்பிரிக்காவில் நாஸ்திக லோகாதய ஆபத்து விலகுதல்.

ஜெ. வ.

இன்று ஆப்பிரிக்காவில் சத்திய வேதம் பரம்புவதற்கு தடையாயுள்ள இரண்டு இயக்கங்கள் இஸ்லாமியமும் பொது உடைமையுமாம். இவ்விரண்டில் பின்னையது ஆப்பிரிக்க மக்களுக்கு அதிக ஆபத்து என்று சொல்லவேண்டும். மக்களுடைய வாழ்க்கையிலும் மன நிலையிலும் பொது உடைமைக்கொள்கைகள் எற்கனவே கலந்துள்ளன. மேலும் அமெரிக்காவிலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் ஆப்பிரிக்காவுக்குக் குடியேறுகின்ற உலக நாட்டமுடைய மக்கள் நாஸ்திக வளர்ச்சிக்கு வழிகோலுகின்றனர். ஆனால் இந்த ஆபத்தைத் தடுக்க ஆப்பிரிக்காவில் 7·5 சதவிகிதமும் கத்தோலிக்கரே இருக்கின்றனர். அலறி எழும்பும் அலைகளின் நடுவில் ஆடி அசைகிற படகுபோல் பொது உடைமையின் அலைகளில் பட்டுக் கலங்குகிறது இன்று திருச்சபை.

இன்றைய சூழ்நிலையில் ஆப்பிரிக்காவில் பொது உடைமை செழித்து ஓங்கி வளர பல காரணங்கள் இருக்கின்றன. ஆப்பிரிக்க வாசிகளான ஏழை மக்கள் தங்களுடைய விவசாயத்தைச் சீர்படுத்த அமெரிக்காவையும் ஐரோப்பாவையும் சேர்ந்த பணக்காரர்களிடமிருந்து பணம் வாங்குகிறார்கள். இத்தனவந்தர்களோவெனில் மக்களுடைய சமுதாய சீர்திருத்தத்தைக் கருதாமல் தங்களுடைய இலாபத்தை மட்டும் கவனிப்பதால் மக்களுடைய லோகாதய மனப்பான்மை வளருகின்றது. விவசாயத்தில் முன்னேறுகிற ஆப்பிரிக்க வாசிகள் நாகரிகத்திலும் நாளுக்குநாள் முன்னேறுகின்றனர். ஆனால் மெய்யான அறிவில் முன்னேறுகிறார்களா? இல்லை. அநாகரிக வாழ்க்கையை விட்டு நாகரிகமடையும் அம்மக்கள் குருட்டாட்ட வாழ்க்கையை விட்டுவிடுகிறதோடு தங்களுடைய மனக் குழப்பத்தில் மத விசுவாசத்தையும் இழந்துவிடுகின்றனர்.

"ஆப்பிரிக்கா ஆப்பிரிக்கருடையது" என்ற கொள்கையுடன் குடியாட்சிக்காக அந்நாட்டில் நிகழ்ந்து வருகிற இயக்கமும் பொது



உடைமையை வளரச் செய்கிறது. இவ்வியக்கம் நாஸ்திகத்தைச் சேர்ந்ததல்லாவிடினும் பொது உடைமையாளர்கள் இதை இயக்குவதால் இவ்வியக்கம் பொது உடைமை வளர்ச்சிக்கு வழிகோலுகின்றது. மேலும் வெள்ளையர்களுடைய நடவடிக்கைகள் சுதேசிகளான நீக்கிரோவர்களுக்குத் துன்பம் விளைவிக்கின்றன. எனவே சுதேசிகள் தங்களுடைய அருவருப்பை வெள்ளையர்கள் பின்பற்றுகிற மதத்தின்மேல், கிறீஸ்துவ மதத்தின் மேல் திருப்புகின்றனர். பணம் திரட்டப் பேராவல் கொள்ளும் வெள்ளையர்களுடைய துர்மாதிரிகை இவ்வுலகப் பொருட்களைத் தேடவும் கடவுளை மறந்துவிடவும், பொதுமக்களுக்குத் தூண்டுகோலாயிருக்கின்றது.

சுதேசிகளுடைய கல்விப் பயிற்சிக்கு ஆப்பிரிக்க அரசாங்கத்தினர் கையாளுகின்ற முறைகளும் நாஸ்திக வளர்ச்சிக்குச் சார்பாயிருக்கின்றது. பாமர பாட்டாளி மக்களுக்கு அடிப்படைக் கல்வி அளிக்கின்ற யூனெஸ்கோ (Unesco) என்னும் ஐக்கிய நாட்டுச் சங்கக் கல்வி முறையில் கடவுளுக்கும் இடம் அளிக்கிறதில்லை. ஆதலால் இளம் சிறுவர்கள் இறைவனின் நினைவையே இழந்துவிட நேரிடுகின்றது. முதன்முதலில் ஆப்பிரிக்காவில் வேதபோதகர் மட்டும் கல்வி கற்பித்து வந்தனர். ஆனால் நாளடைவில் வேதபோதகக் குருக்களின் உரிமை குன்றி வருகின்றது. முன்பு கிடைத்திருந்த பொருளுதவியை இழந்துவிட்டதுமன்றி சுயேட்சையாகக் கல்வி புகட்டும் உரிமையையும் குருக்கள் இப்பொழுது இழந்துவிட்டனர். குருக்களல்லாதவரே கல்வி கற்பிக்கவேண்டுமென்ற கொள்கை (Laicism) ஆப்பிரிக்காவில் பரவி வருவதுதான் இதற்குக் காரணம்.

இங்ஙனம் இவ்வுலகப் பொருட்கள்மேல் தங்களுடைய கவனம் முழுதும் செலுத்த, கடவுளையும் அவருடைய திருச்சபையையும் மறந்துவிடுகின்றனர் ஆப்பிரிக்க மக்கள். இவர்களைக் கடவுள்பால் திருப்பும் திருப்பணி நாளடைவில் மென்மேலும் கடுமையாகி வருகிறது. இப்பணி வெற்றிகாண இம்மாதம் இறைவனை மன்றாடுவோம்.

### ஒப்புக்கொடுக்கும் ஜெபம்

சேசுவே, உமது இருதயத்தின் கருத்துக்களுக்காக, இன்று என் ஜெபங்களையும், வேலைகளையும், இன்ப துன்பங்களையும் மரியாயின் மாசற்ற இருதயத்தின் வழியாக உமக்கு ஒப்புக்கொடுக்கிறேன். என் பாவங்களுக்குப் பரிகாரமாகவும், சபையாரின் கருத்துக்களுக்காகவும், விசேஷமாக உடற் பயிற்சி, விளையாட்டுகளில் கிறீஸ்துவ நெறி முறை ஓங்கும்படியும், ஆப்பிரிக்காவில் நாஸ்தீக லோகாதய ஆபத்து விலகும்படியும், உலகமெங்கும் நிறைவேற்றப்படும் திவ்விய பலிபூசையோடு ஒன்றித்து உமக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

---



# இவர் யார்?

*[ அரு. 4 ]*

A. K.

கப்பர்நாவூம் ஊர். அங்கே ஒரு சிற்றரசன். அவன் மகள் கடின காய்ச்சலாயிருந்தாள். கை மருந்தாய் கொடுக்கக்கூடிய அனைத்தும் அவன் கொடுத்துப் பார்த்தான். யாதொரு பயனுமில்லை. பையன் நிலைமை மிகவும் மோசமாய்விட்டது; அவன் சாகக்கிடந்தான். இன்னது செய்வதென்றறியாமல், பிள்ளையின் தகப்பன் தவித்தான்.

இந்த சமயத்தில் சேசு கானாவூருக்கு வருகிறாரென அவன் காதுக்கு செய்தி எட்டியது. ஜெருசலேமுக்கு திருவிழாவுக்குப் போய் வந்தவர்கள், அங்கே அவர் செய்த அதிசயங்களை எடுத்துரைத்தார்கள். சிற்றரசனுக்கு ஓர் நம்பிக்கை ஏற்பட்டது. ஏன், நான் அவரிடம் ஓடி, அவரை கூட்டி வந்து என் மகனுக்கு உயிர் பிச்சைக் கொடுக்க மன்றாடக் கூடாதென எண்ணினான். கானாவூர் தன் ஊரிலிருந்து சுமார் இருபது மைல் தூரம். ஆனால் அவன் தூரத்தைப் பொருட்படுத்தவில்லை. களைப்பைக் கவனிக்கவில்லை. பிள்ளைப் பாசம் அவனை உந்தித் தள்ளிச் சென்றது. பித்து பிடித்தவனைப் போல் வந்து சேர்ந்தான்; அவரைத் தேடி அடைந்தான்; தன் மகனுக்காக மன்றாடினான், "சேசுநாதர் யூதேயாவிலிருந்து கலிலேயாவுக்கு வருகிறாரென்று அந்த மனுஷன் கேள்விப்பட்டவுடனே, அவரிடத்தில் போய், அவர் வந்து தன் குமாரனைக் குணமாக்க வேண்டுமென்று மன்றாடினான், ஏனெனில் அவன் சாகக் கிடந்தான்." (அரு. 4 : 47)

அவன் சேசுவினுடைய அதிசய வல்லமையைப் பற்றி கேள்வியுற்றிருந்தான். அவர் உடல் நலமளிக்கும் உபகாரி என்று பாராட்டினான். ஆனால் அவன் அவரைப் பற்றி தப்பு அபிப்பிராயம் கொண்டிருந்தான். அதாவது அவர் உடல் நோயைப் போக்கும் நோக்கோடு பணியாற்றுகிறார் என்று மட்டிலும் எண்ணினான். ஆனால் அவர் புதுமைகளையும் அதிசயங்களையும் ஆற்றியதின் முதல் நோக்கு என்ன? உடலுக்கு குணமளிக்கவா? அல்ல. அவர் ஆன்மாவை குணப்படுத்த வந்த ஆத்மீக மருத்துவர். தனது புதுமைகளால் மக்களுக்கு தனது தெய்வீகத்தை தெரிவிக்க விரும்பினார். **புதுமைகள் அவர் உண்மைத் தெய்வம் என்று உலகிற்கு கொடுக்கப்பட்ட சான்**



**றுகளே!** ஆனதால் அவர் சிற்றரசனைப் பார்த்து, சற்று நிதானமாக, "நீங்கள் அற்புதங்களையும் ஆச்சரியங்களையும் கண்டாலொழிய விசுவசிக்க மாட்டீர்கள் என்றார்."

அவன் கலக்கமுற்றான். கால தாமதம் பெருங் கேட்டை வருவிக்கக் கூடும் என்று வருந்தினான். அவன் வீட்டை விட்டு வந்தபோதே, பையனின் நிலைமை மிகவும் கவலைக்கிடமாயிருந்தது. உடனே இவர் புறப்படாவிட்டால்,—அதை நினைக்கவே அவன் உள்ளமும் உடலும் துடித்தன. "சுவாமி, என் மகன் சாகிறதற்கு முன்னே வரவேண்டும்" என்று உணர்ச்சி பொங்க வேண்டினான்.

அவர் அவனைப் பார்த்தார். அவனிடத்தில் என்ன அன்பு! என்ன நேர்மை! என்ன நம்பிக்கை! அவன் மேல் அனுதாபங் கொண்டார். அங்கே சூழ்ந்திருந்த மக்கள் இதோ அவர் உடனே புறப்படுவாரென எதிர்ப் பார்த்தார்கள். ஆனால் இது என்ன! அவர் அசைவதாகக் காணோம். அதற்கு மாறாக, நீ உன் வழியே போ; உன் மகன் உயிர் வாழ்கிறான் என்றார்.

'உன் மகன் உயிர் வாழ்கிறான்'—இவ்வார்த்தையில் ஒரு சக்தியிருந்தது: அவன் இருதயத்தில் நம்பிக்கையை இது மூட்டினது. அவன் வீடு திரும்பினான். மகனை நினைத்தானா? எண்ண அலைகள் மாறி மாறி மோதிக் கொண்டிருந்தன. அவர் வசிகரத்தில் சிக்குண்டான். அவர் தெய்வம்; வெறும் மனிதனல்ல. தெய்வத்தின் வல்லமைக்கு அளவு உண்டோ? தூரமுண்டோ? என் மகன் உயிர் வாழ்கிறான், இது உண்மை என்று நம்பினான்.

வழியில் யாரோ எதிர் கொண்டு ஓட்டமும் நடையுமாக வருகிறதை அவன் கண்டான். அவர்கள் வேறு யாருமில்லை. அவனுடைய வேலையாட்கள் தான். அவர்கள் முகத்தில் ஒளி வீசியது. என்ன செய்தி! பையனுக்கு எப்படியிருக்கிறது? 'உம்முடைய குமாரன் பிழைத்திருக்கிறான் என்று அறிவித்தார்கள்.' சிற்றரசனால் தன் மகிழ்ச்சியை அடக்கக்கூடவில்லை. "எந்நேரத்தில் அவனுக்கு வியாதி குணமானது?" என்றான் அவன். "நேற்று ஏழு மணிக்குக் காய்ச்சல் அவனை விட்டு நீங்கிற்று என்றார்கள்," அவர்கள். என்ன ஆச்சரியம்! என்ன அதிசயம்! காய்ச்சல் ஏழு மணிக்கு விட்டதா? "உன் மகன் பிழைத்திருக்கிறானென்று சேசுநாதர் தனக்குச் சொன்ன நேரம் அதுதான் என்றான்." மனமார அவரை வாழ்த்தினான். வீடு சென்று நிகழ்ந்தவை அனைத்தும் ஒன்றொன்றாய் எடுத்துரைத்தான். "அவனும் அவன் வீட்டாரனைவரும் விசுவசித்தார்கள்" அவரை கடவுளின் அவதாரமென்று ஏற்றுக் கொண்டார்கள்.

இன்னும் சேசு கடவுள் என்பதில் ஐயமுண்டோ? எந்த மருத்துவன், எந்த விஞ்ஞானி இருபது

(318-ம் பக்கம் பார்க்க)

# வாழ்க்கைத் திருப்பம்

## ஐந்து நிமிஷ போதகம்

### I. புதி

இற்றைக்கு 400 வருடங்களுக்கு முன்னர் ஒருவர் இறந்தார். இறந்த போது அவர் படுக்கையண்டை இரண்டே பேர் நின்றனர். அமைதியாகவே வாழ்ந்து, எத்தகைய சந்தடியுமின்றி மறைந்தார். பிரியுமுன் அவர் புத்திமதிகள் கூறவில்லை; மரண சாஸனம் எழுதவில்லை: வாரிசுகளுக்காக செல்வத்தை குவித்து வைக்கவுமில்லை. தனது வாழ்க்கையின் கடைசி நிகழ்ச்சியென்று மரணத்தை அமைதியாக வரவேற்றார்.

65 வருடங்களுக்கு முன் இனிகோ லொயோலா பிறக்கும் போது அவர் ஓர் ஏழைத் துறவியாக மரிப்பாரென்று எவரும் எதிர்பார்க்கவில்லை. பெரிய குடும்பத்தில் பிறந்த குழந்தை, பெரு வாழ்வு அடைவதற்காக, அரும் பெரும் காரியங்கள் சாதிப்பதற்காக என்றெண்ணினார்கள். தனது அரசனுக்காக, தாய் நாட்டிற்காக போர்க் களத்தில் பொருதி பேர்பெறுவது; இதுவே இனிகோவின் மனக்கண் முன் நின்ற குறிக்கோள்.

ஆனால் ஓர் மாறுதல் ஏற்பட்டது. அந்த பிரெஞ்சு வீரன் விடுத்த குண்டு இனிகோவின் வாழ்க்கையின் போக்கை திருப்பி விட்டது. அவர் தனது பொன் ஆடையை கழற்றி அதை பிச்சைக்காரனுக்கு கொடுத்து அவன் கட்டியிருந்த கந்தையை வாங்கி போர்த்துக் கொண்டார். உலக வேந்தனின் குடை நிழலை தள்ளி விட்டு சிலுவையின் தன் நிழலை தேடி நின்றார். 'அரகோன்' அரசனுக்கல்ல; இனி மேல் அவர் போர் புரிவது சேசு அரசனுக்கே. தனது வாளையும் படைத் தலைவனுக்குரிய இதரச் சின்னங்களையும் வானரசியின் பாதத்தண்டை காணிக்கை வைத்தார். அன்றைய நாளிலிருந்து மோட்ச இராணியே அவரது இதய இராணி.

கையில் தடி ஊன்றி, பாதரட்சையின்றி, நொண்டிய வண்ணம் உலகை வெல்லப் புறப்பட்டார் அவ்வீரர். அன்றையிலிருந்து 18 வருடங்களுக்குள் அவர் எத்தகைய அரிய பெரிய வேலைகளையெல்லாம் சாதித்தார் என்றால் 400 வருட காலமாக ஆராய்ந்த பின்னும், அவர் துவக்கி வைத்த வேலையில் கால் வாசி கூட படித்துணர முடியவில்லை. அவர் வேலையும் இன்னும் முடியவில்லை. தொடர்ந்து நடக்கிறது. புவியில் மனிதன் இருக்கும் அளவும் அவ்வேலையும் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கும்.

அவர் மேற்கொண்ட அலுவல் ஞான விதமானது. சிருஷ்டியை சிருஷ்டிகரிடம் திருப்ப வேண்டிய அலுவல்; அதை அவர் அமைதியுடன் செய்து முடித்தார். அங்ஙனம் ஐந்தடி உயரமும், ஆழ்ந்தமைந்த கண்களும், அகன்ற நெற்றியுமுடைய அந்த சிறு மனிதர் தம் நாட்டினருள் வேறு எவனும் அடைந்திராத புகழ்அடைந்த பின் மறைந்தார். இல்லை; அவர் மறையவில்லை. ஆயிரக்கணக்கான மக்கள் உள்ளங்களில் இன்னும் உயிர் வாழ்கிறார். நொண்டியான அந்த சிறு மனிதருடைய சரித்திரத்தின் ஏட்டைப் புரட்டினால், பார்க்கக் கிடைக்காததோர் காட்சி: உணர்ச்சிப் பெருக்குடன் நெருப்பைக் கக்கும் ஆவேசத்துடன் பிரிவினைப் பேயை ஐரோப்பாவிலிருந்து விரட்டியடித்தார் அவர். அவரது உழைப்பின் விளைவாக, படிப்பினையின் பயனை ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் பயனடைந்தனர். ஐரோப்பாவில் மட்டுமென்ன, பாராகுவேயிலிருந்து எத்தியோப்பியா வரையில்; எத்தியோப்பியாவிலிருந்து ஜப்பான் வரையில்; உலகில் ஓர் எல்லையிலிருந்து மறு எல்லை வரை வதியும் எத்தனை எத்தனை மக்கள் அவர் வழியாக கிறீஸ்துவைக் கண்டனர்!

“வி இல்லஸ் கோ”வின் சித்திரங்களை எதிரிகள் போட்ட ஓர் குண்டு அழித்துவிட முடியும், ஆனால் இஞ்ஞாசியாரின் முதல் தியானத்தின் ஞான வாழ்க்கையின் அஸ்திவாரம் என்றைக்கும் நிலைத்திருக்கும். “தோன் ருயிக் ஸாலோ” மக்கள் நினைவில் இருந்து மறைந்து விட்ட பிறகும் இஞ்ஞாசியாரின் ஞான முயற்சிகள் தியான இயக்கத்தின் அடிப்படையாகத் திகழும்.

ஆம், இஞ்ஞாசியார் மறக்கப்பட மாட்டார். அவரை மறந்து விட

முடியாது. ஏனெனில் உலக வரலாற்றின் இயங்கு பாதையை சிலுவையண்டை திருப்பி விட்டவர் அவரே. தனிப்பட்டதோர் அன்புப் பித்துக் கொண்டு சேசுவுக்கு சேவை புரிந்தவர் அவரே! இஞ்ஞாசியார் இறக்க முடியாது. ஏனெனில் சேசு சபை அவருடைய வாரிசு. சேசு சபை என்பது வரலாற்றில் இடம் பெற்று உயிர் வாழ்கின்ற இஞ்ஞாசியாரே யன்றி வேறல்ல.

சரித்திரத்தில் புகழ் ஓங்கி நிற்கிறவர் இஞ்ஞாசியார்; வாழ்க்கையில் ஒரே நோக்கம் கொண்டவர்; அந்த ஒரே இலட்சியம் அடைவதற்கு தனது வாழ் நாள் முழுவதும் அயராது உழைத்தவர். அவரது நோக்கம் அவரது லட்சியம் அது என்ன? கடவுளின் இராச்சியமே யன்றி வேறல்ல.

எனவே, இன்றைய உலகிற்கு, சிதறுண்ட தற்கால உலகிற்கோர் சவால் அல்லவா இஞ்ஞாசியாரின் வாழ்க்கை? அதனுடைய நிலை குலைந்த சிற்றின்ப நாட்டங்களுக்கு, செல்வம், சீர், செல்வாக்கு என்று புலம்பும் மதியீனருக்கு, அதற்கென உயிரையும் கொடுக்க விரும்பி பணம் பணம், புகழ் என்று பிதற்றிக் கொண்டு பித்தர்களாகத் திரியும் அற்பர்களுக்கோர் சவால் அல்லவா இஞ்ஞாசியாரின் வாழ்க்கை? அவர்களது வாழ்க்கையை திருத்தி, அவர்களது இலட்சியங்களை புதுப்பிப்பதற்கல்லவா இஞ்ஞாசியார் உயிர் வாழ்ந்தார்? உலகிற்கு புத்தி மதியளிக்கவல்ல சிலுவை மரத்தை உலகினர் நடுவில் நிறுவும் பணியிலன்றோ அவர் இன்பம் கண்டார்?

இறைவன் முன் விலை பெறுதற்குரிய அந்த ஒரே உண்மையை உலகிற்கு எடுத்துரைப்பதற்காக தன் உயிரையும் துறந்தீர் சிலுவை வீரரே, அர்ச். இஞ்ஞாசியாரே, எங்களுக்காக வேண்டிக் கொள்ளும்.



## இவர் யார்? (315-ம் பக்கத் தொடர்ச்சி)

மைல்களுக்கு அப்பாலுள்ள வியாதியஸ்தனை ஒரு சொல்லால் அதே நேரத்தில் குணப்படுத்தவல்லவன்? ஒருவர் மட்டிலுமே இத்தகைய புதுமையைச் செய்யக் கூடும்— கடவுள்.

இவர் யார்? இவர் தான் சேசு! இவர் தான் நம்மை மீட்க மனிதனாய் வந்த இரண்டாமாளாகிய சுதனாகிய சர்வேசுரன்.

'நாமே வழி; நாமே வாழ்வு; நாமே உண்மை!'

# "இதய தாகம்"

M. K.

வாழ்க்கையிலே ஓர் குறிக்கோள் முன்னின்று வழி நடத்துவது அவசியம். வாழ்க்கையில் நோக்கம் இல்லாதவன் வாழ்வு வீண் குறிக்கோள், பகுத்தறிவுள்ள மனிதனின் உண்மை வழி காட்டி. அதனைச் சீரான முறையில் வகுத்து, எத்துணை இடையூறுகள் நேரிடினும் கலங்காது பின்பற்றுகின்றன வீர இதயங்கள். 16-ம் நூற்றாண்டில் கிறிஸ்துவ மறைக்கு உயிரளித்த இனிகோவின் குறிக்கோள் "இறைவனின் அதிமிகத் தோத்திரம்" என்பதாகும்.

அன்று பயங்கரமான பம்பலூனா முற்றுகையிலே, 'என்னுடலிலே உயிருள்ள மட்டும் என் மன்னனின் புகழ் நாட்டிடுவேன்" என்னும் வீராவேசத்துடன் பீரங்கிக்குண்டு வீச்சுகளின் மத்தியிலே தம் குறிக்கோளின் பலியாக நின்றார் 5-ம் சார்லஸ் மன்னனின் தளபதி இனிகோ. அவரது காலிலே பாய்ந்த குண்டொன்று அவரது வாழ்க்கைச் சக்கரத்தையும் அத்துடன் அவரது நோக்கத்தையும் திருப்பிற்று. காயம் குணமாக படுக்கையிலே இருந்த பொழுது வாசித்த புனிதர் வாழ்க்கை வரலாறு அவருக்கு மற்றொரு உன்னத இதய தாகத்தைச் சுட்டிக் காட்டியது. தெய்வீக அருளொளி பிரகாசித்தது. அன்று முதல் இனிகோவின் இதய தாகம் "அமலனின் அதிமிகத் தோத்திரமே."



இறைவன் சுட்டிக் காட்டிய இப்புனிதக் குறிக்கோளைக் கொண்டு, ஏன் அதையே தன் சேவையின் நாடியாகக் கொண்டு, மலைபோல்

திரண்டெழுந்த இடையூறுகளின் மத்தியிலும் ஊக்கமுடன் உழைத்தார் இஞ்ஞாசியார். மனந்திரும்பிய சவுல் தன்னில் வதியும் இறைவனில் தாகங்கொண்டு உழைத்தாற்போல், இனிகோவும் உழைத்தார். இவ்வுன்னத இதய தாகம் அவரது இருதயத்தில் எவ்வளவு ஆழம் கண்டது என்றால் அவரின் ஒவ்வொரு சிறு வேலையும் இத்தாகத்திற்கு தணிப்பாகாமல் தப்பவில்லை. உதாரணமாக, தாம் எழுதிய சபை ஒழுங்கில் 350 தடவை "இறைவனின் அதிமிகத் தோத்திரம்" என்னும் தம் இதய தாகத்தை வெளியிட்டு, தமது மக்களை அவர்களது சிறிய வேலையிலும் நல்ல நோக்கங்கொள்ள வேண்டுகிறார். இன்னும் தமது "ஞான முயற்சியில்" 'எது எனது வாழ்வின் குறிக்கோளுக்கு மிகவும் அனுகூலமானதோ, அதையே விரும்பித் தெரிந்துகொள்வேன்" என்றும், "எதிலும் இறைவன் புகழப்படவேண்டும்" என்றும், "இறைவனின் புகழ் என்னை எதையும் செய்யத் தூண்டக் கூடும்" எனவும் திரும்பத்திரும்ப அழுத்தம் திருத்தமாய் கூறியுள்ளார்.

இவ்வுண்மையை வெளிப்படுத்த அர்ச். இஞ்ஞாசியாரின் வாழ்க்கையில் நடந்த ஓர் சம்பவத்தை உற்று நோக்குவோம். ஓர் நாள் சங். லையினஸ் சுவாமியாரிடம் நம் அர்ச்சியசிஷ்டவர் " இப்பொழுது நீங்கள் இறந்தால் விண்ணுலகை அடைவது நிச்சயம். இன்னும் சிறிதுகாலம் நீங்கள் ஆத்தும ஈடேற்றத்திற்கு உழைக்க ஆண்டவர் உங்களுக்கு வல்லமை கொடுத்து, பின்னர் உமது ஈடேற்றம் நிச்சயமில்லை என்றால் இவ்விரண்டில் எதை நீர் தெரிந்து கொள்வீர் " என வினவ சங். லையினஸ் சுவாமியார் " நான் இப்பொழுதே மோட்சமடைவதைத் தெரிந்து கொள்வேன்" என்றார். அதற்கு நம் இறைவனின் அதிமிகப் புகழ்த்தாகங்கொண்ட தந்தை, " நான், கடவுளுக்கு எது அதிக மகிமையைத் தருகிறதோ அதைத் தெரிந்து கொள்வேன் " எனத் தம் இதய தாகத்தை வெளியிட்டார்.

ஆம், இந்த இதய தாகம் அவர் இறைவனுக்கு அளித்த சமர்ப்பணம். இந்த இதய தாகம் தளரா சேவையின் தூண்டுகோல். இந்த இதய தாகம் சேசுவின் வீரனின் கேடயம். ஏன் அவனது வாழ்க்கையின் ஊன்றுகோல்.

அவனின் அதிமிகத் தோத்திரம் உந்தன் தாகம் தந்தையே.

அல்லும் பகலும்
ஆவலுடன் இதனை
எம் சிந்தையில் வைத்து
மைந்தர் யாம் ஊக்கமுடன்
உழைத்திட வேண்டிடும்
ஓ எம் இனிகோ தந்தையே !



# உலகப் பெரியார் இஞ்ஞாசியார்

மைக்கல் பிரான்சீஸ், சே. ச.

புனித இஞ்ஞாசியார் இறந்து நான்கு நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. நானூறு ஆண்டுகளின் நிறைவை நினைவுறுத்தி அவரைப் போற்றுவதற்காகத் தொடங்கப்பட்ட " இஞ்ஞாசியார் ஆண்டும் " இந்த ஜூலைத் திங்களோடு முடிவடைகின்றது. கத்தோலிக்கர்கள் அவரை வாயார வாழ்த்தினார்கள் ; அவரைப் பற்றி பலவற்றை அறிந்தார்கள் ; அவரிடம் நம்பிக்கையுடன் வேண்டிக்கொண்டார்கள், இதை எல்லாம் அவர்கள் செய்தது பெரும்பாலும் அவர் பேர்பெற்ற புனிதர் என்பதனால் ; அவர் இவ்வுலக வாழ்விலேயே தெய்வீகக் காட்சிகளைக் காணும் பேறுபெற்றவர் என்பதன் நிமித்தம் ; அவர் கடவுளிடம் மனுப்பேசி பல நலன்களைப் பெற்றுத் தருபவர் என்பதை முன்னிட்டு. இந்த அருமை பெருமைகளைக் கொண்டவர் அவர் என்பது உண்மையே. அவர் புனிதர். புனிதர் என்ற முறையில் அவர் உலகப் பெரியார். இருந்தாலும், வேறு வகையிலும் அவர் உலகப் பெரியார் ஆவார்.

புனித இஞ்ஞாசியாரின் ஆன்ம வாழ்வின் உயர்வை ஒரு கணம் மறந்துவிட்டுப் பார்த்தாலும், அவர் மிகப் பெரிய மனிதராகவே துலங்குகிறார். தனி மனிதர் என்ற முறையிலும், அவர் வரலாற்றில் இடம் பெற்ற பெரிய மனிதராகத் திகழ்கிறார். எவராலும் எளிதில் செய்ய முடியாத செயற்கரிய செயல்களைச் செய்பவர்களே பெரியார் எனப்படுவார்கள்.



" செயற்கரிய செய்வார்
பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் "

உலகப் போக்கை நல்வழிக்குத்திருப்பிவிடுகிறவர்களுக்கே வரலாற்றில் இடம் உண்டு. கத்தோலிக்க வாழ்வில் புகுந்திருந்த ஊழல்களைக் களைந்தது, புராட்டஸ்டாண்டு வெள்ளம் வரம்பின்றிப் பரவாமல் அணை கட்டியது, கிறிஸ்துவின் பெயரையே கேட்டு இராதவர்கள்

அதைக் கேட்குமாறு செய்தது — இவை இஞ்ஞாசியாரின் செயற்கரிய செயல்கள். முந்திய இரண்டையும் அவர் ஐரோப்பாவில் செய்தார். பிந்திய மூன்றுவது செயல் ஆசியாவில் செய்யப்படுமாறு கவனித்துக் கொண்டார். இதனால் அவர் வேலை உலகத்தின் பெரும் பகுதியில் நிகழ்வதாயிற்று.

அக்காலத்தில் இங்கிலாந்து, அயர்லாந்து நாடுகளில் கத்தோலிக்கர் துன்பப்பட்டதைக் கண்டு வருந்தியவர் இஞ்ஞாசியார். இதனால் அயர்லாந்துக்கு ப்ரோயே, சால்மரோன் ஆகிய இரு சேசுசபைக் குருக்களை அனுப்பிவைக்க அவர் தயங்கவில்லை. லூதரும், மெலாங்தனும் பிறந்த ஜெர்மனி நாட்டில் புராட்டஸ்டாண்டு சமயம் பரவிய விதத்தைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை. புராட்டஸ்டாண்டு சமயத்தவர் "ஜெர்மனியில் சேசு சபையினர் கால் வைத்தால் டான்யூப் நதியில் எறியப்படுவார்கள்" என எச்சரித்தார்கள். எனினும், அந்நாட்டுள் பாவர் இராயப்பரும், கனிசியுஸ் இராயப்பரும் நுழைந்து, கத்தோலிக்கப் பணி ஆற்றுமாறு செய்து, அவர்களுக்கு அடிக்கடி உற்சாகம் ஊட்டிக்கொண்டு வந்தவர் இஞ்ஞாசியார். பிரான்ஸ் நாட்டில் கத்தோலிக்கக் கல்விக்கு ஆபத்து வந்தது. பாரிஸ் பல்கலைக் கழகத்துக்கு ரிபதெனெய்ரா என்பவரை அனுப்பிவைத்து, சளைக்காமல் போராடி, கத்தோலிக்கக் கல்வியில் தமக்குள்ள ஆர்வத்தை இஞ்ஞாசியார் காட்டினார். இத்தாலியில் பதுவை, வெனிஸ் முதலாய இடங்களில் லேயினெஸ் என்ற குருவானவர் சொற்பொழிவு ஆற்றி, பழைய விசுவாசத்தைக் காப்பாற்றுமாறு செய்தார்.

தாம் வசித்த ரோமாபுரியில் அவர் பற்பல பணி புரிந்தார். கத்தோலிக்கரை ஒடுக்கிய இங்கிலாந்து நாட்டிலிருந்து குரு மாணவர் வந்து படிக்க ரோமன் கல்லூரியில் இடம் கொடுத்தார். இவ்வாறே, புரோட்டஸ்டாண்டு ஜெர்மனியிலிருந்து குரு மாணவர்கள் வந்துபயில, ஜெர்மன் கல்லூரியைத் திறந்துவிட்டார். அனாதைச் சிறுவர்களுக்கு விடுதி, திக்கற்ற சிறுமிகளுக்கு விடுதி, தவறான வழிகளில் நடந்துவிட்ட பெண்களைக் காக்க ஒரு மடம் என இவ்வாறு பிறர் சிநேகச் செயல்கள் புரிந்தார்.

இவற்றிற்கு மேலாக, ஐரோப்பாவில் அவர் செய்த பெரும் பணி திரிதெந்து மகாசங்கத்தில்தான் என்று சொல்லவேண்டும். புராட்டஸ்டாண்டு சூறாவளியினின்றும் திருச்சபையைக் காக்கவும், தப்புக் கொள்கைகளை எடுத்துக் காட்டிக் கண்டிக்கவுமே இம்மகாசங்கம் கூடியது. இதில் லேயினெஸ் முதலாய சேசு சபைக் குருக்கள் தீவிர பங்கு எடுத்துக்கொள்ளுமாறு செய்து, அவர்கள் வேலையைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து, ஆலோசனை கூறி, உற்சாகப்படுத்தி வந்தவர் திரைக்குப் பின்னால் இருந்த இஞ்ஞாசியாரே. திரிதெந்து மகா சங்கத்துக்கு அவர் செய்த உதவி, கத்தோலிக்க உலகத்துக்கே செய்த பேருதவி ஆகும்.



இனி, ஆசியப் பகுதிகளுக்குப் புனித சவேரியாரை அனுப்பி, அவரைக்கொண்டு இஞ்ஞாசியார் செய்த சேவைகளை விவரிக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியா எங்கே, ஜப்பான் எங்கே, கிழக்கிந்தியத் தீவுகள் எங்கே, இங்கெல்லாம் சவேரியார் அலைந்தபோது, அவருக்கு உற்சாகம் ஊட்டி ஆறுதல் அளித்தவர் இஞ்ஞாசியாரே அன்றி வேறு யார்? சவேரியாருக்கும் இவருக்கும் நடந்த கடிதப் போக்குவரத்தைப் படித்தவர்களுக்கு இது நன்கு விளங்கும்.

இத்தனையும் செய்தவர் ரோமாபுரியைவிட்டு வெளியே போகாதவர். "இவ்வளவையும் அவர் அமைதியாகச் செய்தார்; அவர் விளம்பரம் செய்யவில்லை, அடுக்குமொழி பேசவில்லை, உணர்ச்சியைத் தட்டி எழுப்பவில்லை; யாவற்றிற்கும் மேலாக, அவரிடம் உலக ஆயுதம் இருக்கவில்லை, பணம் இருக்கவில்லை..." ஆனால் அவர் கடவுளோடு ஒன்றுபட்டவராக இருந்தார்.

சிலர் நினைத்துக்கொள்ளுகிறார்கள், புனிதர்கள் எல்லாரும் உலக வரலாற்றோடு தொடர்பு இல்லாதவர்கள் என்று. இவர்கள் எண்ணம் தப்பு என இஞ்ஞாசியார் காட்டிவிடுவார். அவர் புனிதர். எனினும், உலக அரங்கில் செயல் ஆற்றியவர். இவ்விரு முறையிலும் அவர் உலகின் வழிகாட்டி, உலகப் பெரியார்.

---

# அர்ச். அந்தோனியார் கோவில்

## அபிஷேகமும்—முதற்பூசையும்

**(ஜே. பி.)**

பரிசுத்த வியாகுலமாதா சபை கன்னியர்களால், லொயோலா காலேஜ் சேசு சபை குருக்கள் முயற்சியால், லொயோலா காலேஜ் கம்பவுண்டின் தென்கோடியில் ஓர் மடம் சென்ற வருடம் ஸ்தாபிக்கப்பட்டது. காலேஜ் கோவிலுக்கும் மடத்திற்கும் அதிக தூரமாய் இருப்பதைக் கண்ட பயலெட் பவுண்டன் பேனா கம்பெனி அதிபர் திரு. பீ. ஏ. சஞ்சீவி அவர்கள், தமது சொந்த செலவில் மடத்தை அடுத்து அர்ச். அந்தோனியார் கோவிலைக் கட்டிக் கொடுத்ததுடன் சுமார் 4 அடி உயரமுள்ள அர்ச். அந்தோனியார் சுரூபமும் கொடுத்தார். 12—6—56 லொயோலா காலேஜ் பிரின்ஸ்பால் சேசு சபை சங். அருள்சாமி அவர்களால் கோவில் அபிஷேகம்பண்ணப்பட்டு மறுநாள் அர்ச். அந்தோனியார் திருநாளன்று காலை 6-30 மணிக்கு புதிய கோவிலில் சங். சுவாமி அவர்களால் முதற் பூசையும் செய்யப்பட்டது. அழகும் அமைப்புமுள்ள இவ்வழகிய கோவில் அன்று கொடி தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டு காலை கதிரவன் செங்கதிர் சுடரொளியினால் ஜெகஜோதியாய் மிளிர்ந்தது. இந்த வைபவத்திற்கு வியாகுல மாதா சபை மதர் ஜெனரல் அவர்கள் திருச்சியிலிருந்தும்—ராயப்பேட்டை மடத்து கன்னியர்களும். திரு. பி. ஏ. சஞ்சீவி குடும்பத்தினரும்—டாக்டர் தைரியம்-ஜே. பி. ராட்ரிக்ஸ் இன்னும் அநேக குடும்பத்தினரும் வெகு தூரத்திலிருந்து விஜயம் செய்திருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.

---

# ஞான முயற்சிகளின் ஞானி



[ அருள் ஜோசப் சே. ச. ]

மாலை நேரம். தன் மாடி அறையில் தனியே தவித்துக்கொண்டிருக்கிறான் அமல்ராஜ். அவன் மனதில் ஒரு பெரும் புயல். "போவதா, போகக்கூடாதா" என்று நிச்சயம்பண்ண முடியாமல் தயங்குகிறான். இதுதான் அவனது கல்லூரி வாழ்வின் இறுதி வருடம். இன்னும் மூன்று மாதங்களில் பி. ஏ. தேர்வு எழுதவேண்டும். இம் மூன்று ஆண்டுகளாக கல்லூரியில் நடக்கும் வருட தியானத்திற்குச் சாக்குபோக்குச் சொல்லித் தப்பித்துவிட்டான். இவ்வருடமும்... எண்ணியெண்ணி முடிவில் ஓர் தீர்மானம் எடுத்தான், இவ்வருடம் தியானம் செய்யவேண்டுமென்று. இது மட்டுமல்ல, யாவரும் எதிர் பார்த்ததற்கு மாறாக, வெகு பயபக்தியுடன், செப தபசுடன் தியானம் செய்தான். பலன்? மனம் மாறி புது மனிதனானான்; தேவ அன்னையின் பாதத்தில் சரணாகதியடைந்தான்; உறுதிமொழி கொடுத்தான். இன்று அமல்ராஜ் ஒரு சந்நியாச சபையில் குருத்துவத்திற்குப் படித்துக்கொண்டு வருகிறார்.

இவ்வித காட்சி நம் அனுதின வாழ்வில் அடிக்கடி காண்கிறோம்.



இவ்வளவு குறுகிய காலத்தில் உற்சாகமற்ற ஓர் வாழ்வு, புத்துயிர் பெற்று, தாராள சிந்தையுடன் மிளிர்வதற்கு காரணம் என்ன? புனித இஞ்ஞாசியார் வெளியிட்ட ஞான முயற்சிகளே. தேவனின் அருளுக்குப்பின், இந்த ஞான முயற்சிகளே, நமது ஞான வாழ்வின் தூரநோக்குக் கண்ணாடியாகவும், அணுநோக்குக் கண்ணாடியாகவும் இருக்கிறது. இவைகளில் இஞ்ஞாசியாரின் சக்தி, பண்பு, கலை பொதிந்து கிடக்கின்றன; இவைதான் அவர் நமக்கருளின மரண சாசனம். மூன்று நாட்களோ அல்லது முப்பது நாட்களோ இம்முயற்சிகளைச் செம்மையாய் செய்கிற எவனும் தனது உள் சீவியத்தில் ஓர் மறு



மலர்ச்சி காணாமலிருக்கமாட்டான். ஆகையினால்தான் 1548-ல் ஜூலை 31-ந் தேதி சட்டபூர்வமாக பவுல் என்னும் பாப்பானவர் இவைகளை அங்கீகரித்தார். மேலும் 1649-ல் அலெக்ஸாந்தரும், 1753-ல் 14-ம் ஆசீர்வாதப்பரும், 1900-ல் 13-ம் சிங்கராயரும் இந்நூலுக்கு புகழ் மாலைகள் சூட்டினர்; இறுதியாக 1922-ல் 11-ம் பத்திநாதர் இந்நூலின் மகிமையையும் பலனையும் எடுத்தோதிவிட்டு, புனித இஞ்ஞாசியாரை எல்லாத் தியானங்களின் பாதுகாவலராக உயர்த்தினர்.

இப்படிப்பட்ட ஞான முயற்சிகளின் அம்சந்தான் என்ன? 'ஞான', அதாவது உள் சீவியம், மறை சீவியம், அருள் சீவியம். 'முயற்சிகள்,' அதாவது அந்த மறை சீவியத்தை இறைவன் அறவிதிப்படி சீர்படுத்தி நடத்த உதவும் சில பயிற்சிகள். இவைகளை இஞ்ஞாசியார் நான்கு பாகங்களாகப் பிரிக்கிறார். ஒவ்வொரு பாகத்திற்கும் ஒரு குறிப்பிட்ட நோக்கம். உதாரணமாக, நமது கதி என்ன? நாம் யார்? நமக்கும் நம்மைப் படைத்த இறைவனுக்குமுள்ள தொடர்பு என்ன? பாவம் எப்படி வந்தது? அதன் தன்மை? அதன் வினை? அதைத் தவிர்ப்பதெப்படி? என ஆராய்ந்து நம் ஞான சீவியத்தில் உள்ள இடர், தாறுமாறான ஆசாபாசங்களின் ஆடல்களைக் கண்டுபிடித்து, வெறுத்து, பாவத்தையும், பாவச் சமயத்தையும் விலக்குவதே முதல் பாகத்தின் நோக்கம். இதை "கழிவழி" என்பர். ஆகையினால்தான் இப்பாகத்தில் அடிப்படை உண்மை, நரகம், மோட்சம், பாவம், சாவு, தீர்வை முதலிய தியான முயற்சிகள் இடம் பெறுகின்றன.

ஆண்டவரை கர்த்தாவாகவும், நீதிபதியாகவும் கவனித்தபின் அவரிடம் நமக்குப் பயம் ஏற்படுகின்றது, ஒருவித கலக்கம்கூட. ஆனால் ஞான வாழ்வில் திகிலுடன் செல்பவன் புண்ணிய நெறியில் அதிக பலன் பெறுவது ஆச்சரியந்தான். நடுக்கத்துடன் பள்ளிக்குப் போகும் பையன் எவ்வளவு வேகமாய் போவான் என்பது நமக்குத் தெரியும். அஃதேபோல்தான் ஞான சீவியத்திலும். ஆகவே இவ்விரண்டாம் பாகத்தில் அன்பின் அரசரைப்பற்றி தியானிக்கிறோம். அவர் நமது அரசர், தலைவர், இரட்சகர், தந்தை, நண்பன். அருள்படியும் வதனம்; அன்பு சூழ் இதயம். சாந்தம், தயாளம், இரக்கம், கிருபை, பொறுமை, தவம் முதலிய குணங்கள் மிளிரும் வாழ்வு. அவர் யார்? நமது கர்த்தர்; ஆனால் இப்பொழுது விண்ணுலகினின்று நமக்கு மண்ணில் மனுவாக உதித்த தேவன். நமது வீரர்; நமது ஞான சீவியத்தின் மேல்வரிச் சட்டம். அவரே நமது வாழ்வு, மோட்ச பாதை, விண்ணுலக ஒளி — என இவ்வித பண்புகளை அறிவுறுத்தவே "சேசுவின் அரசாட்சி," "இரு யுத்தக் கொடிகள்," "மூவினத் தாழ்ச்சி," சேசுவின் வாழ்வின் உண்மைகள் முதலிய தியானங்களை நம் கண்முன் வைக்கிறார் இஞ்ஞாசியார். இவைகளைத் தியானிக்க,

தியானிக்க நமது உள்ளத்தில் அன்பு வெள்ளம் பெருக்கெடுக்கிறது; அன்பு ஈனும் ஆர்வமுடைமை; அது ஈனும் தாராள சிந்தை.

எனினும் நாம் மாமிசப் பிண்டங்கள்; தாராள சிந்தை எழ, அதற்கு தகுந்த முயற்சிகள் எடுத்து ஞான சீவியத்தைத் துரிதப்படுத்த, அந்தோ! மனம் தயங்குகிறது. மறுபடியும் ஓர்வித திகில். என்னல் இவ்வித தீர்மானத்தை வாழ்வில் பழக முடியுமோவென சந்தேகம். இப்பாழும் மனப்பான்மையைப் போக்கி நமக்குத் திடனூட்ட சேசுவின் பாடுகளைப்பற்றித் தியானிக்கிறோம் மூன்றும் பாகத்தில். இதன் பலன்? ஓர் புத்துணர்ச்சி எழுகிறது; தளர்ந்த நாடி நிமிர்கிறது; சோர்ந்த வதனம் பிரகாசிக்கிறது; ஒருவித புரட்சி மனப்பான்மை குடிகொள்கிறது. இகய உலகில் நடமாடும் விரோதிகளை வென்று வீழ்த்தி வெற்றிபெற ஓர்வித வீரக்கனல் பறக்கிறது. நாம் எடுத்த தீர்மானம் நிலைமை பெறுகிறது.

இவ்வெற்றி ஏதோ ஒரு மாயை அல்லது கனவல்ல; ஆனல் உண்மை வாழ்வில் ஊடுருவும் ஓர் நனவு. ஞானப் போரின் வெற்றி பரமானந்தம், சேசுவோடு ஐக்கியமாகும் பாக்கியம். இது எப்படி நமது தலைவர் சேசுவின் உயிர்த்த வாழ்வில் நிச்சயமாகிறது என்பதை நான்காம் பாகத்தில் கவனிக்கிறோம். நமது உள்ளத்தில் ஓர் குதூகலம்.

இதன் பின் ஆத்துமத்தில் ஓர் தாகம், வேட்கை; மறுமலர்ச்சி; புண்ணிய நெறியில் வளர ஓர் வித ஆர்வம், அன்பு. இதன் பயன் நமக்கு வெளிச்சம். எத்தனை பேர் தியானத்திற்குப் பின் தமது குறிக்கோளை மாற்றி உத்தம கத்தோலிக்கராக சீவித்திருக்கின்றனர். ஏன், புனித சவேரியாரும் இவ்வித ஞான முயற்சிகளின் பயனல்தான் மனமாறி, இந்தியாவிலும், ஜப்பானிலும், தமது குரு இஞ்ஞாசியாரின் மனப்பான்மையை அப்படியே சித்தரித்து வாழ்ந்து, சேசு சபையின் சான்றோன், புனிதர் என பட்டம் பூண்டார்.

ஞான முயற்சிகள் கொண்ட தியானம் எவருக்கும் அவசியம்; ஆனல் இக்கால மனிதருக்கு அத்தியாவசியம். ஆகவே, சில நாட்கள் உலகத்தின் ஓசை, ஊழல்களிடமிருந்து, ஒதுங்கி மௌனத்திலும், செபத்திலும், ஒறுத்தலிலும் தியானித்து, நமது கத்தோலிக்க மனப்பான்மை எப்படியிருக்கிறது என்று ஆராய்ந்தறிய தியானகாலமன்றி மற்ற காலங்களில் வெகு கடினம். தியான காலத்தில் சாதாரண உண்மைகளின் உயரிய கருத்தை நுகர்கிறோம். மிளகை அப்படியே விழுங்குவதைக் காட்டிலும், அதை மெதுவாக மென்று சாப்பிட்டால் தானே அதன் குணம் விளங்கும்; அஃதேபோல், தியான காலங்களில் தினமும் வாசிக்கும், கேட்கும் உண்மைகள் நமது வாழ்வின் மகத்துவத்தில் ஊடுருவி அதைப் புனிதப்படுத்தும் கருவிகளாகத் திகழ்கின்

[ 335-ம் பக்கம் பார்க்க ]

# குணக் குன்று

— F. M. —

இவ்வருடம் ஜூலை மாதம் 31-ந் தேதி அர்ச். லொயோலா இஞ்ஞாசியார் ரோமையில் மரித்த நான்காம் நூற்றுண்டு. இந்நூற்றுண்டின் விழாவையொட்டி பரிசுத்த பாப்பரசர் சேசு சபைத் தலைவருக்கு ஒரு நிருபம் வரைந்துள்ளார். அதில் அவர் இந்நூற்றுண்டின் கொண்டாட்டத்தால் சேசுசபை மக்களுக்கும் விசுவாசிகளுக்கும் விளையக் கூடிய நன்மைகளைக் குறிப்பிடுகிறார்.

அர்ச். இஞ்ஞாசியார் உலகில் தோன்றிய பெரிய தலைவர்களில் ஒருவர் என்பதைப் புராட்டஸ்டாண்டினரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். 16-ம் நூற்றுண்டின் பதித இயக்கத்திற்கு மறுமொழியாய்த் தோன்றிய கத்தோலிக்கு மறுமலர்ச்சியில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டவர்களில் ஒருவர். திருச்சபையின் சரித்திரத்தையும் உலக சரித்திரத்தையும் பெரிதும் பாதித்த அர்ச்சியசிஷ்டவர். அவரது சரித்திரத்தை வரைந்தவர்கள் அவரது குணங்களைப் பின்வருமாறு தொகுத்துரைக்கின்றனர்.

" அர்ச். இஞ்ஞாசியார் அமைதி, எளிமை, தாழ்ச்சி நிறைந்தவர்; ஆனல் சோம்பலும் சிறுபுத்தியும் அவரிடம் கொஞ்சமேனும் கிடையாது. நிதானம், மரியாதை, தாராளம், பெருந்தன்மை அவரிடம் இயல்பாகவே அமைந்திருந்தது. உலக காரியங்களை வெறுத்து, அழிந்துபோகின்றனவற்றை அவமதித்து, எப்போதும் தனது நோக்கை என்றும் நிலைத்திருப்பவற்றின்மேல் வைத்திருப்பார். சிறு விஷயங்களிலும் பெரிய விஷயங்களிலும் மிகவும் உத்தமமான முறையையே கடைப்பிடிப்பார். தனது உணர்ச்சிகளை முழுதும் அடக்கிய அவரது இருதயத்தின் அமைதி அவரது வதனத்தில் விளங்கும். இப்பூரண அமைதியில் அவரது உள்ளம் நித்திய வாழ்வை நோக்கி வழுவாது தாவி நிற்கும்.



"அவரிடத்தில் சிறந்து விளங்கிய கிறிஸ்தவப் புண்ணியங்களில் முதன்மையானவை: சாதாரணமாக மனிதரிடத்தில் காணப்படாத நிதானமும், அவர் இருதயத்தில் பற்றி எரிந்த சிநேகமுமே. கடவுளையும், மனிதருக்காகப் பிறந்த தேவகுமாரனையும் சகலரும் அறிந்து நேசித்துத் துதிப்பதற்கு முழுமனதுடன்

உழைக்க இச்சிநேகம் அவரை ஊக்கியது. மக்கள் தமது சிருஷ்டிகரையும் இரட்சகரையும் அறிந்து சிநேகித்துப் பணிந்து ஒழுகி, மறைந்துபோகும் இவ்வுலக வாழ்வை நம்பாது என்றும் மறையாத வாழ்வில், எல்லாவற்றிற்கும் மேலான நன்மையை உணர்ந்து அனுபவிப்பதில், தங்களுடைய சந்தோஷத்தை நாடும்படி உழைத்தார்.

"அவருடைய ஆழ்ந்த பரந்த மனம் எவ்வகையான உழைப்புக்கும் சிந்தனைக்கும் ஏற்றதாயிருந்தது. மக்களையும் உலக காரியங்களையும் நிர்வகிப்பதில் இணையற்றவர். அவரது தீர்மானம் எப்போதும் தெளிவானது, உறுதியானது. பிற மனிதர்களின் இருதய நுட்பங்களைத் திறந்த புத்தகத்தைப்போல் அறியக்கூடியவர். வேறு வேறு மனப்பான்மையுடையவர்களையும் கவர்ந்து நடத்துவதில் இணையற்றவர். உலகில் தோன்றிய பெரிய தலைவர்களில் ஒருவர். ஆழ்ந்த யோசனை, உறுதியான தீர்மானம், எதிரிடும் தடைகளை மேற்கொள்ளுவதில் திறமை, இறுதிவரை பின்வாங்காத விடாமுயற்சி, எடுத்த காரியத்தைச் சாதிக்கும் மனோதிடம்—இவற்றில் ஈடு எடுப்பற்றவர். இத்துடன் அவரது உள்ளத்தில் ஆன்ம தாகம் இடைவிடாது பற்றி எரிந்தது. கடவுளின் அதிமிக மகிமையை அதிகரிக்கும் பல்வேறு முயற்சிகளைக் கைக்கொண்டார். கிருஸ்துநாதரின் ஆட்சியைப் பரப்ப முழு ஊக்கத்துடன் உழைத்தார். அவரது பரிசுத்த திருச்சபையில் பக்தியையும் பரிசுத்ததனத்தையும் வளர்க்கப் பாடுபட்டார். இவ்வுழைப்புக்களிடையெல்லாம் அவரது நிதானமும், குணவினிமையும், பரந்த மனமும், தெய்வீக ஞானமும் குன்றாது ஒளி வீசியது."



# புரட்சி வீரர் இஞ்ஞாசியார்

அ. ஜோ.

புரட்சி மனப்பான்மையற்ற வாழ்வு புகழற்ற வாழ்வு; போக்கற்ற வாழ்வு. புரட்சியாளரே பூமியை ஆள்கின்றனர். அவரே சமூகக் கொடையாளர்; சமதர்ம நோக்கம் கொண்டவர்; சான்றோரெனப்படுபவர். ஆனால் புரட்சி பெயர் பூண்டு செழிக்கிறது ஓர் குழப்பம். உண்மையில் அது புரட்சியல்ல, ஆனால் கிளர்ச்சி. கிளர்ச்சியாளன் சுயநலப்பிரியன்; தியாகமற்ற தீயன்; சமதர்ம எதிரி; சமூக விரோதி; உலகத்தைக் கூறுபோட்டு, மக்களின் மெய்ப்பாடுகளை மடியவைத்து, துர்நாட்டங்களைத் துரிதப்படுத்தும் பாதகன். புரட்சியாளன் சீர்திருத்த ஆக்கவேலையில் முனைந்து நிற்கிறான்; கிளர்ச்சியாளனோ அதை அழிப்பதில் ஆர்வங்கொண்டிருக்கிறான். ஒருவன் தேவனின் தூதன்; மற்றொருவன் கூலியின் கூட்டாளி; ஒருவன் அன்பு மழை பெய்து அனைவரும் அகமகிழ அயராது உழைக்கிறான்; மற்றொருவன் பகட்டுப் பேச்சுகளால் பாமரரை மயக்குகிறான்.

புனித இஞ்ஞாசியாரோ உன்னத புரட்சியாளர். அவர் எடுத்த தீர்மானம், ஏற்படுத்தின சபை திருச்சபைக்கு மட்டுமல்ல, உலகிறகே ஓர் ஔடதம் போன்றது. உலக முழுவதும் இளைஞர் கல்வியை ஊக்கத்துடன் செய்து, மக்களுக்கு "ஞான முயற்சிகள்" கொண்ட தியானங்கள் கொடுத்து, சமூக சேவை செய்து, விஞ்ஞான விருத்தியில் ஈடுபட்டு, வேதங்களை முறையுடன் போதித்து, அனைவருக்கும் அவரவர் ஆத்தும சரீர நன்மைக்கு அயராது உழைத்து வருபவர் சேசு சபையார் என்றால் மிகையாகாது. இதற்கெல்லாம் அடிப்படை புனித இஞ்ஞாசியாரின் புரட்சி மனப்பான்மையே.

1495-ம் ஆண்டு நவீன கலை இயக்கம் ஐரோப்பாவைப் பற்றுகிறது. கிரேக்கர், ரோமர் கலைகளில் ஓர் தனிப்பட்ட ஆர்வம். ஏன் அவைகளில் ஒரே பித்துகூட



உடல் நலமும், உருவின் திருவும் போற்றப்பட்டன; சிற்றின்ப போகம் உயர்த்தப்பட்டது; பரித்தியாகம் பரிகசிக்கப்பட்டது. மனம் சென்ற வழியே மக்களின் வாழ்வு நெறி. இளைஞர் மனம் தடுமாறினது; பறிகொடுக்கப்பட்டது. அந்தோ! இவ்வியக்கம் மடங்களையும் பாதித்தன; குருக்களும் இதன் வலைகளில் சிக்குண்டனர். பலன்? திருச்சபையில் புல்லுருவி பாய்ந்தது: குருக்கள் சிலர் தமது உன்னத நோக்கத்தை இழந்தனர்; குருத்துவம் ஓர் ஜீவனாம்சமாகக் கருதப்பட்டது. திவ்யபலிபூசை புறக்கணிக்கப்பட்டது; வேதபோதகத்தை துச்சமாய் மதித்தனர். திருச்சபையின் போதனைகளை மறந்தனர் மக்கள்; ஞான மேய்ப்பர்களின் அதிகாரமும் மதிப்பும் மங்கலாயிற்று. இப்படியாக இழிவினைகள் மலிந்திருந்த காலம் 16-ம் நூற்றாண்டு. ஏதோ இடிவிழும் முன் கருமேகங்கள் ஒன்றோடொன்று மோதி உருண்டுகொண்டிருந்தது போலிருந்தது அக்காலத்தின் பிரச்சனைகள். எப்படி இடிவிழுந்து மக்களுக்குத் துன்பமும், அல்லது மழைபெய்து மக்களுக்கு இன்பமும் கொடுக்கலாமோ, அஃதே போல் இப்பிரச்சனைகளை உபயோகப்படுத்தி கிளர்ச்சியை உண்டு பண்ணலாம். லூதர் கிளர்ச்சி செய்தான்; இஞ்ஞாசியார் புரட்சி செய்தார். கிளர்ச்சியின் பயன்தான் இன்று உலவும் ஆயிரத்திற்கு மேலேயுள்ள பிரிவினை சபைகள்; புரட்சியின் பயன்தான் இன்று மக்களின் மனதை வசீகரிக்கும் சேசு சபை. இப்புரட்சியின் அம்சமென்ன?

பிரிவினை, திருச்சபையை ஆட்டினது; எங்கும் தப்பறைகளை பறையடித்துப் பரப்பினர் பிரிவினைக்காரர்கள். லூதரின் தோழர்கள் எங்கும் பரவி, மடங்களையும், மடாதிபதிகளையும், பாப்பானவரையும் தாக்கினர். கத்தோலிக்க வாழ்வு குன்றியது; வனப்பின்றி வாடியது. ஒய்யார வாழ்வும், உயர்ந்த கல்வியும் பிரிவினை வெள்ளத்தைத் தடுக்க முடியவில்லை. பாப்பரசர் ஏங்கினார்; அணைபோட அயராது வேண்டினர். மடாதிபதிகள் முன்வரவில்லை; அரசர்கள் முனைந்தனரல்லர்; ஆனால் இஞ்ஞாசியாரின் புரட்சியாளரே பாப்பரசரின் சேவைக்கு விரைந்தனர். பாப்பானவருக்கு உதவ ஒரு தனிப்பட்ட வார்த்தைப்பாடும் நேர்ந்து கொண்டனர். எங்கும், எப்பொழுதும், எப்படியும் சென்று சேசுவின் எதிரிகளைச் சின்னாபின்னமாக்க விரைந்தனர். சேசு சபை 1540-ம் ஆண்டு செப்டம்பர் மாதம், 27-ந் தேதி சட்டபூர்வமாக பிறந்தது. உடனே திருச்சபையின் மறுமலர்ச்சிக்கு உழைக்கின்றனர்.

எங்கும் அவர்கள் உழைப்பு பயனளிக்கின்றது. கோவில்களில் ஒரே ஜனத்திரள். பகை, தீவினைகள் பறக்கின்றன; அருள் நிறைந்த பிரசங்கங்களும் "ஞான முயற்சிகளும்" மக்கள் மனதை மாற்றுகின்றன. ஆனால் வெறும் பிரசங்கங்கள் மட்டுமல்ல. அவர்களது செபதப நிறை வாழ்வு ஓர் மேல்வரிச்சட்டமாக இருக்கின்றது. ஜெர்மனி, பிரான்ஸ், ஆங்கில தேசம், இத்தாலி எங்கும அவர்கள் சண்டமாருதம் ஒலிக்கின்றது. தாறுமாறான துறவிகள், கொடுங்கோல் மன்னர்கள், பாவச்சேற்றில் உழலும் மக்கள்—எல்லோரும் தமது மறையின் பெருமையை உணர்ந்து, மறுபடியும் உத்தம கத்தோலிக்கராக வாழத் துவக்கினர்.

இப்பணியைச் செம்மையாய் செய்ய, அமைப்பிலும், ஆட்சியிலும், அப்போஸ்தலத்துவ சேவையிலும்கூட ஓர்வித புரட்சி உண்டு பண்ணினார் புனித இஞ்ஞாசியார்.

— சேசு சபையாருக்கு ஒரு தனிப்பட்ட உடை கிடையாது. ஒவ்வொரு இடத்திலும் சுதேச குருக்கள் அணியும் உடைதான் அவர்களுடைய உடை. ஆனால் மற்ற சபையினருக்கு (உ-ம். கார்மேல் சபை) ஓர் தனிப்பட்ட உடை எங்கும் அவசியம்.

— அகுஸ்தீனார் சபை, சாமிநாதர் சபை, பிரான்சீஸ்கு சபை என்பது போல் புனித இஞ்ஞாசியார் ஏற்படுத்தின சபையை, இஞ்ஞாசியார் சபையென்றழைககாமல், சேசு சபை யென்றார். எத்தனையோ எதிர் பிரசாரங்கள் இப்பெயருக்கு! பாப்பானவர்கூட அங்கீகரிக்க முதலில் தயங்கினார். "என் பெயரைச் சூட்ட, நான் அருகனல்ல; என் குமாரர்கள் சேசுவின் சாயலில் அவரின் தாசர்களாக வாழட்டுமென்ற ஒரே நோக்கத்தால்தான் சேசு சபை என்றழைக்க துணிந்தேன்" என்றார் இஞ்ஞாசியார். அங்கீகாரமும் பெற்றார்.

— அக்காலத் துறவறச் சபைகள் திருச்சபைக் கட்டளை செபத்தை தகுந்த நேரத்தில் எல்லோரும் சேர்ந்து பாடுவர் அல்லது சொல்லுவர். இதுதான் மரபு. தனது குமாரர்களின் அப்போஸ்தலத்துவத்துக்கு இது இடைஞ்சலாக இருக்கலாமென்று, சேசு சபையார் சேர்ந்து கட்டளைச் செபம் சொல்லவேண்டியதில்லையென்று நிர்ணயித்து, அங்கீகாரமும் பெற்றார்.

இப்படியாக இன்னும் பல விதங்களில் மாற்றங்கள் செய்தார். அக்கால துறவற உலகிலேயே இம்மாற்றங்கள் ஓர் புரட்சியை உண்டு பண்ணியது. இதனால் பலர் சேசு சபையின் எதிரிகளுமானார்கள், குறுகிய நோக்குடையவர். 1546-ம் ஆண்டு டொல்டோ மேற்றிராணியார், சேசு சபையார் "ஞான முயற்சிகளை" செய்ய கூடாது என்றும் கட்டளையிட்டார். ஆனால் பாப்பானவரின் அனுமதியின் பேரில் எதிரிகள் அடங்கலானார்கள்.

ஏன் இந்நூதனமெல்லாம்! ஏற்கனவே சொல்லியது போல், அக்கால கிளர்ச்சியை அடக்கி, எங்குஞ் சென்று உழைக்க உதார குணமும், கல்வித் திறமையும் உடையவர்களாய், ஆத்தும ஈடேற்ற பணியில் திறமுள்ளவர்களான அப்போஸ்தலர்களை உருவாக்கவே. சேசுவின் தாசர்களாயிருந்து, துறவறம் மேற்கொண்டு, மிக்க பலனுடன் ஞான உப

தேசம், பிரசங்கம், வேத விளக்கம், பதிதர்களோடு தர்க்கம், கல்வி போதித்தல், மடங்களையும், மக்களையும் சீர்திருத்தல், குருக்களுக்கு ஞான ஒடுக்கம் கொடுத்தல், நோயாளிகளையும், சிறைவாசிகளையும் கவனித்தல், சேவகர்களை விசாரித்தல், பதிதர்களுக்கு பரமன் ஒளியை பகிரங்கப்படுத்தல்—முதலிய பலவகை புனித சேவைகளால் இன்னும் உலக மக்களுக்கு உற்சாகத்துடன் சேசு சபையார் உழைத்து வருகின்றனரேயானல், அவர்களுக்கு சக்தியையும், பண்பையும், "சபை அமைப்பு" "ஞான முயற்சிகள்" வழியாய் இன்னும் இன்றும் விண்ணுலகிலிருந்து ஊட்டி வருகிறவர் புரட்சி வீரர் புனித இஞ்ஞாசியாரே.



## உங்களுக்குத் தெரியுமா ?

1. " இப் பிரபஞ்சத்தின் மக்கள் ஒளியின் மக்களிலும் தங்கள் சந்ததியிலே அதிக விவேகமுள்ளவர்களாயிருக்கிறார்கள்." — இந்தப் பாடம் எந்த உவமையிலிருந்து கற்பிக்கப்படுகிறது ?

2. இராயப்பர் என்ற பெயர் கொண்ட எத்தனை பாப்புமார்கள் உரோமையில் ஆட்சி புரிந்திருக்கிறார்கள் ?

3. திவ்விய பலி பூசைக்கு உதவி செய்ய ஆண் பிள்ளை கிடைக்காத போது, ஒரு பெண் பிள்ளை பூசையில் குருவானவருக்கு எப்படி உதவி செய்யலாம் ?

4. அர்ச். இஞ்ஞாசியார் ஏற்படுத்திய சந்நியாச சபையின் பெயர் என்ன ?

5. மேற்றிராணியார் அபிஷேகம் பெறுவதற்கான மிகக் குறைந்த வயதென்ன ?

6. பரிசுத்த கன்னிமரியாயின் தாயார் யார் ?

**(352-ம் பக்கம் பார்க்க)**



# மனம் உண்டானல் இடம் உண்டு

ஞா. அ. சவரிராஜ் சே. ச.

நொண்டி ஒருவன் வெற்றி வீரனுக நாட்டிற்கு நற்சேவை செய்ய விரும்புவது ஒன்றரைக் கண்ணன் ராஜவிழி விழிக்க விரும்பியது போலாம். அவன் ஒன்றில் தன் கால்களைச் சரிபடுத்த வழி பண்ண வேண்டும், அல்லது தன் ஆசையை அறவே ஒழிக்க வேண்டும். இவற்றில் முதற் காரியத்தைச் செய்ய முனைந்தார் நொண்டியாயிருந்த லொயோலா இஞ்ஞாசியார்.

பிறப்பிலேயே முடவனயிருந்தவரல்ல இஞ்ஞாசியார். தூய வீரம் நிறை குடும்பத்திலே உதித்து, தாய் நாட்டிற்குத் தனிப் பெரும் சேவை செய்ய நினைத்து, ஸ்பெயின் நாட்டரசனுக்காக பாம்பலூனவில் போர் புரியும் போது காலில் காயம் பட்டு நொண்டியானர். தன் குறிக்கோள் நிறைவேற வண்ணம் குறுக்கிட்ட முடமையைப் போக்கத் துணிந்தார். மயக்க மருந்து கொடுத்து நோயாளிக்கு நோவென்பதே தெரியாமல், நயமான கருவிகளைக் கொண்டு நாசூக்காய் ரண சிகிச்சை செய்யப்பட்ட காலம் அல்ல 16-ம் நூற்றுண்டு. வரட்டுத்தனமானக் கருவிகளைக் கொண்டு முரட்டுத்தனமாய் ரண சிகிச்சை செய்யப்பட்ட காலம். எனினும் வீரன் இஞ்ஞாசியார், ரம்பம் கொண்டு மரம் அறுப்பது போல், தன் கால்களை அறுத்து சரிபடுத்தும்படியாக வைத்தியருக்கு விடையளித்தார். முதல் தடவை ஒரு பயனும் அளிக்கவில்லை. ஆகவே மீண்டுமொரு தடவை தன் கால்களை அறுத்து சரி பண்ண வைத்தியர்களைத் தூண்டினர். கருமமே கண்ணுயினர் மெய் வருத்தம் பாரார் அன்றோ ?

இத்தகைய கொடிய ரண சிகிச்சைக்குப் பின் இஞ்ஞாசியார் சன்னஞ் சன்னமாய் சுகமடைந்து வந்தார். அந்நாட்களிலே பொழுதைப் போக்க ஏதாவது உற்சாக மூட்டும் நூற்களைத் தேடினர். ஆனல் அவரிருந்த அரண்மனையில் கிடைத்ததெல்லாம் சேசுக்கிறிஸ்துவின் சீவிய சரிதையும், அர்ச்சிய சிஷ்டவர்களின் வரலாறுகளுமேயாம். வேண்டா வெறுப்பாய் அப்புத்தகங்களை வாசிக்கத்

தொடங்கினர். அதன் பயன்? பூவோடு சேர்ந்த நாரும் மணம் பெறுமல்லவா?

இன்றிருந்து நாளை மறைந்தொழியும மன்னனுக்கு ஊழியம் செய்து வந்த வீரன், என்றும் மாறாத, எல்லா நன்மையும் நிறைந்த அரசர் ஒருவருண்டு; அவருக்குத் தம் வாழ் நாட்களை யெல்லாம் அர்ப்பணித்த ஆட்களும் உண்டு என்று கண்டார். அவ்வரசன் தான் சேசுகிறிஸ்து; அவ்வாட்கள் தான் அர்ச்சியசிஷ்டவர்கள். அவ்வரச சேவையில் ஏன் தானும் சேரக் கூடாது? அவ்வீரர்களை ஏன் தானும் பின்பற்றக் கூடாது? என சிந்தித்தார். "அவனாலும் அவளாலும் செய்ய முடிந்தால், என்னால் ஏன் முடியாது?" என்ற கேள்வி அவர் மூளையைக் கிளறிக் கொண்டேயிருந்தது. இறுதியாக பூவுலக மன்னன் சேவையைத் துறந்து, மேவுலக அரசன் சேசுவின் சேவையில் ஈடுபட உறுதி கொண்டார். இவ்வரச சேவைக்கு கைகளும் கால்களும் அத்தியாவசியமல்ல. ஏனெனில் இம்மன்னனின் வீரர் "கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம்" செய்யும் வீரர். அவர்கள் தங்களைத் தாங்களே ஒறுத்து, தங்களை முழுதும் சேசுவுக்கு அர்ப்பணித்தவர்கள்; சேசு நேசத்தால் தூண்டப்பட்டு பிறரையும் அவரது சேவைக்குக் கொண்டு வர பாடுபடுபவர்கள்.

இங்ஙனம் சேசுவின் சுத்த வீரனாகும் சீரிய கருத்தோடு ஓர் நாள் நள்ளிரவு தன் உயரிய ஆடைகளை யெல்லாம் களைந்து விட்டு பிச்சைக்காரன் ஒருவனது பஞ்சை உடையை உடுத்திக் கொண்டு மன்ரேசா என்னும் மலையை அடைகிறார். அங்கே ஓர் வருடமளவாய் ஓர் குகையிலே கடுந் தபமுயற்சியும் நெடுஞ் செபத் தியானமும் செய்து தன்னைத் தானே ஒறுத்து சேசுவின் அன்பில் வளர்ந்தார். வளர்ந்தவர் தனது ஆன்மாவில் பற்றி யெரிந்த தேவ சிநேக அக்கினியை தன் அயலார் ஆன்மாக்களிலும் ஏற்றி வைக்க விழைந்தார். விழைந்தவர் அதற்கு உத்தம வழி தான் ஒரு குருவானவராவதே என அறிந்தார்.

ஆகவே குருப்பட்டம் பெறுவதற்குத் தேவையான படிப்புக்களைக் கற்கத் துவங்குகிறார். முதல் முதல் கற்க வேண்டியது லத்தீன் மொழி. அதற்காக முப்பதிற்கும் அதிகமான வயதில் ஆரம்ப வகுப்புக்கள் படிக்கும் இளைஞரோடு லத்தீன் படிக்கத் தயங்கவில்லை இஞ்ஞாசியார். விடுமுறை நாட்களில் பல இடங்களுக்குச் சென்று தான் மன்ரேசாவில் தொகுத்த **ஞான முயற்சிகள்** என்ற உட்தியானத்தை மக்களுக்குக் கொடுத்து வந்தார். குருவல்லாதவர் இத்தகைய நூதன முறையில் வேதம் போதிப்பதைக் கண்டு இஞ்ஞாசியாரை விலங்கிட்டு சிறையிலடைத்தனர் சில திருச்சபை அதிகாரிகள். அப்பொழுது அவருக்கு ஆறுதலளிக்க வந்த தன் நண்பரிடம், "சேசுவுக்காக நான் தாங்கத் தயாராயிருக்கும் சங்கிலிகளை யெல்லாம் இந்நகர் கொள்ளாது" என உணர்ச்சி வசப்



பட்டு உரைத்தார். "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ்!"

இப்படியாக கிறிஸ்து இராஜாவின் சேவையிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்த இஞ்ஞாசியார் இதே நோக்கத்தைக் கொண்ட புதியதோர் சந்நியாச சபையை, சேசு சபையை, நிறுவினார். அதன் அங்கத்தினர்களின் ஏகோபித்த வேண்டுதலின் பேரில் அதன் அதிசிரேஷ்டருமானார். அதன் பின் தன் சந்நியாச சகோதரரை திக்கெட்டுமனுப்பி கிறிஸ்துவின் ஆட்சியை எங்கும் அதிகரிக்க அயராது உழைத்தார். "ஆண்டவரின் அதிமிக தோத்திரம்" என்பதை விருதுவாக்காய்க் கொண்டவர் இஞ்ஞாசியார். "உலக முழுவதையும் தேவ சிநேக அக்கினியால் பற்ற வை", என்று சொல்லி சவேரியாரை சிந்து தேசத்திற்கு அனுப்பியவர் இஞ்ஞாசியார். இப்புதிய சபையின் மேல் கோபங் கொண்டு சேசு சபையாரெல்லாம் சுட்டெரிக்கப்பட வேண்டும் என கர்ஜித்த திருச்சபை விரோதிகளுக்கு, "ஆம்; சேசு சபையாரெல்லாம் தேவ சிநேக அக்கினியால் சுட்டெரிக்கப்பட வேண்டும்," என்று ஒத்து ஊதினவர் இஞ்ஞாசியார்.

இத்தகைய ஆறாத அவியாத சேசு சேவையின் இரகசியம் தான் என்ன? மண்ணுலக அரசனுக்கு பணி புரிவதை விட விண்ணுலக அரசருக்கு சேவை செய்வது மேல் என அறிந்த இஞ்ஞாசியாருக்கு அவ்வுண்மையை கடைபிடிக்க மனம் இருந்தது; அவரது மனத் திடனோடு என்றும், யாருக்கும் பொய்க்காத தேவ அருளும் சேர்ந்ததால் தன் தீர்மானத்தை நிறைவேற்ற இடம் இருந்தது. இன்னும் யார் யாரிடம் கிறிஸ்துநாதருக்கு சேவை செய்ய மனமிருக்கிறதோ, அவர்களுக்கு தங்கள் மனத் தீர்மானத்தை நிறைவேற்ற தேவ அருள் உதவியால் கட்டாயம் இடமும் உண்டாகும். ஏனெனில் புனித சின்னப்பர் கூறுவது போல்," என்னை ஊக்குவிக்கிறவரில் என்னால் எல்லாம் செய்ய முடியும்." இத்தகையோரின் தீராத ஏக்கம் இதுதான்: கிறிஸ்துவிற்காக என்ன செய்தேன்? என்ன செய்கிறேன்? என்ன செய்யப் போகிறேன்?

---

ஞான முயற்சிகளின்... (326-ம் பக்கத் தொடர்ச்சி)

றன. ஆகவே ஒவ்வொரு கத்தோலிக்கனும், ஒரு வருடத்திற்கு மூன்று நாட்களேனும் தியானஞ்செய்து வாழ்வைப் புனிதப்படுத்த முயல்வது அவசியம்.

இப்படி, நம் ஞான வாழ்விற்கு மருந்துபோல், முறைப்படி கோர்வையாக முயற்சிகளைக் கொடுத்த ஞானி இஞ்ஞாசியாரை அண்டி நாம் என்றும் சேசுவின் உத்தம ஊழியராகவும், திருமறையின் தீரமுள்ள சேவையாளராகவும் திகழவேண்டிய அருளை பெற்றுத்தர வேண்டிடுவோம்.



# சேசு சபை யாத்த வீரா!

இராகம்—சங்கராப[…]வது மேளம் தாளம்—ஏகம்

பாடல் : பெஸ்கிதாசன்

இசை : சுவாமி M. A. தம்புராஜ்

## பல்லவி

| | | | | |
|---|---|---|---|---|
| | , ஸாக | காமா | பாதா | நீதநி ஸ் |
| | சேசு | சபை | யாத்த | வீ…ரா |
| | , பஸ்நி | தபபா | ,காம | தாமா ப |
| | சேவை | யுள்ளம் | கொண்ட | தீ…ரா |
| 1. | , தாத | தாதநி | ,ஸ்ரிஸ் | நிதபா |
| | வீசும் | பகை. | வென்ற | சூ . ரா |
| | , காம | தா,ப | மபமக | ரீககா |
| | வேண்டும் | வ . ரம் | ஈந்தி | டாயோ |
| 2. | , தாத | ;நாதநி | ,ஸ்ரிஸ் | நிதபா |
| | வீசும் | பகை. | வென்ற | சூ . ரா |
| | , காம | தா,ப | மபமக | ரீககஸா |
| | வேண்டும் | வ.ரம் | ஈந்தி | டாயோ. |
| | , ஸாக | காமா | பாதா | நீதநி ஸ் |
| | சேசு | சபை | யாத்த | வீ…ரா |

## சரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| | , காக | ககரீ | ,ஸரிக | ரிஸஸரி |
| | பீடு | ந . டை | போட்டு | இந்.த |
| | , மாம | மாமபமக | , கஸரீ | ரிககா |
| | பேயு | லகை… | மாற் ற | வந்த |
| 1. | , பாப | பாபத | , காம | பாபா |
| | தேடு | ஞான | வழி | கண்ட |
| | , தாநி | தபதா | காமா | பாபா |
| | தேசி | க.னே | நீடு | வாழ்க |
| 2. | , பாப | பாபத | ,காம | பாபா |
| | தேடு | ஞான, | வழி | கண்ட |
| | பஸ்ாநி | தபபத | மபாமகா | ரீககஸா |
| | தே.சி | கனே.. | நீடு. . | வாழ்க.. |

[ பின்னுள்ள சரணங்களை முதல் சரணத்தைப் போல் பாடவும்.

சேசு சபை யாத்த வீரா!
சேவை யுள்ளம் கொண்ட தீரா!
வீசும் பகை வென்ற சூரா
வேண்டுவரம் ஈந்திடாயோ?

**1**

பீடுநடை போட்டு இந்தப்
பேயுலகை மாற்ற வந்த
தேடுஞான வழி கண்ட
தேசிகனே, நீடு வாழ்க!

**2**

சொல்லும் செயலும் சேசுவிற்கே
என்று வாழ்ந்த கரும வீரா!
நல்லதாம் உன் அரும் சேவை
நாடு எங்கும் பரவவேண்டும்

**3**

பாரெல்லாம் உன்தூய பக்தி
பரந்து ஓங்க அருள் புரிவாய்
ஊரெல்லாம் உன்நேய சீடர்
உழைக்கவே பலமும் தாராய்!

**4**

அன்பினாலே உலகை வென்ற
அருள்மறையின் வீரா வாழி!
என்னிதயம் கிறீஸ்து மயமாய்
ஆகிடவே ஆசீர் கூறாய்!



# அர்ச். இஞ்ஞாசியாரும் — — அநுதின சற்பிரசாதமும்

J. M. G.

அடிக்கடி திவ்விய நன்மை வாங்கும் வழக்கத்தை விட்டுவிட்ட காலத்தில் அவ்வழக்கத்தைப் புதுப்பிக்கச் சருவேஸ்வரன் லொயோலா இஞ்ஞாசியாரைத் தெரிந்துகொண்டார். கலைக்கியானங்களைப் படிக்கு முன்னரே மோட்சத்திலிருந்து வந்த ஞான அறிவைக்கொண்டு மன்ரேசாவிலும் பார்சலோனாவிலும் உள்ள விசுவாசிகளுக்கு ஞாயிறு வாரந்தோறும் நன்மை வாங்கும் வழக்கத்தைக் கற்றுக்கொடுத்தார். திரிதேந்தின் சங்கத்திற்கு முன்னரே வாய்மொழியாலும் எழுத்தாலும் நன்றாய் நன்மை வாங்குவதற்குள்ள குணங்களையும் பயனையும் கூறியுள்ளார்.



சபை ஸ்தாபகரின் விருப்பத்திற்கிணங்கி சேசுசபையோர் சபை தொடங்கிய காலமுதலிருந்தே அடிக்கடி திவ்விய நன்மை வாங்கும்படி விசுவாசிகளைத் தூண்டி வந்தனர். அதனால், 1546-ம் ஆண்டில் வலன்சியா நகரில் ஒரு கிளர்ச்சி உதித்தது. குருக்களும் மேற்றிராணிமார்களும் இது நூதன வழக்கம் என்று கண்டித்தனர். சாமிநாதர் சபையைச் சேர்ந்த ஒரு துறவி தினம் திவ்விய நன்மை வாங்குவது சாவானபாவம் என்றே சொல்லிவிட்டார். இக்குழப்பத்தைக்கண்ட தோமாஸ் வில்லனோவா என்னும் அதிமேற்றிராணியார் — சேசுசபையின் நண்பர் — தம் கிறீஸ்துவர்கள் யாவரையும் மேற்றிராசன ஆலயத்துக்கு அழைத்து தேவ நற்கருணைப் பத்தியைப்பற்றி இரண்டு மணி நேரம் சொற்பொழிவாற்றி ஞாயிறு வாரந்தோறும் யாரும் திவ்விய நன்மை வாங்கப் பொது உத்தரவு அளிப்பதாகவும், அநுதினம் திவ்விய நன்மை வாங்க யாருக்காவது ஆசையிருந்தால் தம்மிடத்தில் வந்து பேசினால் உத்தரவு கிடைக்குமென்று சொன்னார்.

1551-ம் ஆண்டு சேசுசபை சில்வஸ்தர் லந்தீன் எனும் குருவானவர் இத்தாலி நாடு



முழுவதும் பிரசங்கம் செய்து வந்தவர். தேவநற்கருணைப் பத்தி வெகுவாய்க் குறைந்திருப்பதைக் கண்டு விசனித்து ஒவ்வொரு ஊரிலும் “சற்பிரசாத சபை” ஒன்று நிறுவி அதன் அங்கத்தினர் மாதம் ஒரு முறை கட்டாயம் நன்மை வாங்கவேண்டுமென்றார். லந்தீனோ போதித்துக்கொண்டிருந்த சர்சானோ மாகாணத்திற்கு போவதில்லா வந்தபோது அந்நகர் குருக்களோடு ஓர் ஆலோசனைச் சங்கத்தைக் கூட்டினர். அவர்கள் கண்ட தீர்மானம் என்னவெனில் : அடிக்கடியோ வேண்டுமானால் தினசரியோ திவ்விய நற்கருணை வாங்குவதைக் கூடாதெனத்தடுக்க எவருக்கும் அதிகாரம் இல்லை ; எனினும் நன்மை வாங்குகிறவன் சாவான பாவம் இல்லாமல் இருப்பதாகத் தானே அறிந்திருப்பதோடு சேசுவுக்காக வாழ்ந்து வர ஆசிக்கவேண்டும்.

அடிக்கடி திவ்விய நன்மை வாங்குவதற்கு எதிர்ப்பாக வந்த ஆட்சேபனைகளைக் கிள்ளியெறிய ஒரு சிறு நூல் எழுதும்படி அர்ச். இஞ்ஞாசியார் சாஸ்திரியான சால்மரனுக்குச் சொன்னார். தன் தந்தையின் அபிப்பிராயத்தை சேசுசபை அச்சாஸ்திரி அதில் வரைந்தார். “ வார முறையாவது சற்பிரசாதம் அருந்த எந்நிலையிலுள்ள கிறீஸ்துவர்களையும் தூண்ட வேண்டும். அடிக்கடி நன்மை வாங்குவகற்கும் அபூர்வமாய் நன்மை வாங்குவகற்குமுள்ள நிபந்தனை ஒன்றே. சாவான பாவத்தை அகற்றி விசுவாசத்திலும் தேவ சிநேகத்திலும் வாழவேண்டும். ஆதிகாலத்து சாஸ்திரிகளின் நோக்கப்பிரகாரம் குறைந்த புண்ணியமோ குறைவான பக்தியோ திவ்விய நன்மை வாங்க விக்கினம் இல்லை. அந்நிலையில் வாங்கும் நன்மையும் நலனைப் பயக்கும்.”

சாஸ்திரியான சால்மரன் திரிதேந்தின் சங்கத்தில் அதிகம் உழைத்து வந்தது யாவரும் அறிந்த செய்தி ; தேவ நற்கருணை பக்தியைப் பற்றி அச்சங்கத்தில் விரிவாய்ப் பேசினார். அச்சங்கம் மேற்சொன்ன புத்தகத்தில் உள்ளதைத்தான் கூறிப்போயிற்று : திவ்விய நன்மை வாங்கச் சாவான பாவம் இல்லாமல் இருக்கவேண்டும் ; சாவான பாவம் இருக்குமேயாகில் மனஸ்தாபப்பட்டால் போதாது, தேவ நற்கருணை வாங்குமுன் பாவசங்கீர்த்தனம் செய்ய வேண்டும். மற்றும் அந்நூலில் உள்ளதையே வற்புறுத்தியது.

1556-ம் ஆண்டு மதரீது கிறீஸ்தோப்போர் இப்புத்தகத்தைத் திருத்தி அச்சிலேற்றினார். தேவ நற்கருணையில் தம்மைத்தாமே நமக்குக் கொடுக்கும் சேசுநாதர் பாஸ்குத் திருநாளில் ஒருவர், ஞாயிற்றுக்கிழமைகளிலும் மற்ற நாட்களிலும் வேறொருவரா? சில காலத்தில் மட்டும் அவரது தெய்வீகத்திற்கு நாம் அஞ்சவேண்டும், வேறு சில காலம் அவரது இரக்கத்தைப்பற்றித் தர்க்கிக்க வேண்டுமா? சற்பிரசாதம் என்றும் ஒரே சேசு. சற்பிரசாதம் நம் ஆசாபாசங்களை அடக்கும் அங்குசம், நமது பாவங்களுக்கு

முறிவு, நமது ஆன்ம நோய்களுக்கு மருந்து, நமது பலவீனத்தில் அன்னம், விருந்து. புண்ணியவான்களுக்குச் சன்மானமாக சற்பிரசாதத்தை சேசுநாதர் ஏற்படுத்தினுரென திருச்சபை ஒருநாளும் கருதவில்லை. நல்ல கிறீஸ்துவர்கள் வாரம் ஒருமுறையாவது நன்மை வாங்கவேண்டும்; ஆதிக்கிறீஸ்துவர்களின் வழக்கப் பிரகாரம் விசுவாசிகள் தினந்தோறும் நன்மை வாங்குவது மகா இலாபகரமும் போற்றத்தக்கதுமான வழக்கம் என்று கிறீஸ்தோப்போரும் அந்நூலில் எழுதினுர்.

கிறீஸ்தோப்போர் பிரசுரித்த சிறு புத்தகம் லொயோலா இஞ்ஞாசியார் கொடுத்துப் போன சற்பிரசாத மாண சாதனம் என்று சொல்லலாம்.

நென்மேனி

## புனித இஞ்ஞாசியார் திருநாள் அறிக்கை

## 31—7—56

அன்பர்களே!

நென்மேனி திருயாத்திரை ஸ்தலத்தில் வழக்கம்போல் புனித இஞ்ஞாசியார் திருநாள் 31—7—56-ல் நடைபெறும்.

இவ்வாண்டு அன்னவரின் மரணத்தின் நானூருவது வருடமாகையால், விசேஷ ஆடம்பரத்துடன் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படும்.

**22—7—56 ஞாயிறு மாலை 6 மணிக்கு கொடியேற்றம்; நவநாள் ஆரம்பம். நவநாட்களில் பிரதிதினமும் பகுதி பகுதியாக யாத்திரீகர்கள் சாத்தூர் பங்குக் கோவிலிலிருந்து ஜெபம் கீதங்களுடன் யாத்திரையாக வருவார்கள்.**

**காலையில் பாடற்பூசை, மாலையில் திவ்ய நற்கருணை ஆசீர்வாதம்.**

**கடைசி 5 நாட்களில் ஆசீர்வாதத்துக்கு முன் பிரசங்கம் நடக்கும்.**

**30உ திங்கள் மாலை 7 மணிக்கு மாலை ஆராதனையும், திவ்ய நற்கருணை ஆசீர்வாதமும் நடக்கும்.**

**31—7—56 காலை 2 மணிக்கு முதல் பூசை; அதன்பிறகு சப்பர சுற்றுப்பிரகாரம். 7 மணிக்கு 2-வது பூசை (பாட்டுப்பூசை) பின் திவ்ய நற்கருணை ஆசீர்வாதம் நடக்கும்.**

பரிசுத்த இஞ்ஞாசியாரின் பக்தர்கள் அனைவரும் திரண்டு வந்து தத்தமக்குத் தேவையான ஆன்மீக, சரீர நன்மைகளை அடைந்து ஏகுவார்களாக.

பங்குக் குரு, சாத்தூர்.

குறிப்பு: (1) நென்மேனி சாத்தூரிலிருந்து கிழக்கே 6 மைல் தூரத்திலிருக்கிறது. பிரயாணத்திற்கு பஸ் வசதிகள் உண்டு. பிரத்தியேகமாக இரண்டு பஸ்கள் யாத்திரீகர்களுக்குமட்டும் உதவ நிறுவப்பட்டிருக்கிறது.
(2) யாத்திரீகர்கள் நவநாட்களில் தங்குவதற்கு இடவசதியும் தண்ணீர் வசதியும் அமைக்கப்பட்டிருக்கிறது.




**ஞானமணியின் பதிலுக்கு எழுதுவோர் முழு விலாசத்துடன் எழுதவேண்டும். அசம்பாவிதமான கேள்விகள் கவனிக்கப்படா.**

*கேள்வி: 1.* அர்ச். தமதிரித்துவத்தின் பரம இரகசியத்தை புற மதத்தினருக்கு விளக்குவது எப்படி? சின்னக் குறிப்பிடம் அவ்வளவு தெளிவுபடவில்லை. திரு மூர்த்திக்கும் தமதிரித்துவத்துக்குமுள்ள வித்தியாசம் என்ன?

M. A. C. Melapalaiyam

*பதில்:* நமது இரட்சணியத்துக்கடுத்த சத்தியங்களை நாம் அறிந்துகொள்ளும்பொருட்டு, சர்வேசுரன் தாமே மனிதரோடு பேசி அவைகளை வெளிப்படுத்தினுர். சர்வேசுரன் நமக்கு வெளிப்படுத்தின சத்தியங்களுக்குள்ளே நம்முடைய புத்தியினுல் அறியவும் கண்டுபிடிக்கவும் கூடாதவைகளான சத்தியங்களே பரம இரகசியங்களென்று சொல்லப்படும். இப்படிப்பட்ட சத்தியங்களை சர்வேசுரன் தாமே வெளிப்படுத்தியிருக்கிறதினுலே, இவைகளைச் சத்தியமென ஏற்று உறுதியாய் விசுவசிக்கவேண்டியது.

இப்படி இவைகளை ஏற்று விசுவசிப்பது முற்றிலும் நியாயமாகும். ஏனெனில் நாம் சர்வேசுரனுடைய தவறுத சாட்சியத்தைக் கொண்டே அவைகளை விசுவசிக்கிறோம். இவ்வுலக காரியங்களிலும் நமக்குத் தெரியாதவற்றை, அவைகளைப்பற்றி அறிந்தவர்கள் எடுத்துச் சொல்லும்போது அவை உண்மையென்று ஏற்றுக்கொள்கிறோமன்றோ? மேலும் இயற்கையிலுங்கூட மனிதர்கள் கண்டுபிடிக்காத விஷயங்கள் அநேகம் இருக்கின்றன அல்லவா? அப்படியானுல் அளவில்லாத சர்வேசுரனைப் பற்றி மனிதர்களுடைய புத்திக்கு எட்டாத உண்மைகள் இருப்பது அதிசயமாகுமோ? இவ்விதம் நமது புத்தியினுல் நாம் கண்டுபிடிக்கக்கூடாததான சர்வேசுரனைப்பற்றிய விஷயங்களை சர்வேசுரன் தாமே நமக்கு வெளிப்படுத்தினுலொழிய நாம் அறிந்துகொள்ள முடியவே முடியாது. இப்படி சர்வேசுரன் தமது அந்தரங்க சீவியம் பற்றி வெளிப்படுத்தியுள்ள ஒரு சத்தியம், அர்ச். தமதிரித்துவத்தின் பரம இரகசியம்.

அர்ச். தமதிரித்துவத்தின் பரம இரகசியத்தை புற மதத்தினருக்கு விளக்கவேண்டுமாயின், முந்த முந்த கிறீஸ்துநாதர் இவ்வுலகில் பிறந்து சீவித்து மரித்தார் என்று சரித்திர பூர்வமாக அவர்களுக்கு நிரூபிக்கவேண்டும். இதை அவர்

கள் ஏற்றுக்கொண்ட பின்னர் அவர் மெய்யாகவே சர்வேசுரன் என்பதை அவருடைய சீவியத்திலிருந்தும் அவருடைய வார்த்தையிலிருந்தும் செய்கையிலிருந்தும் சுட்டிக் காண்பிக்கவேண்டும். அவர் சர்வேசுரனானதால் அவர் ஏமாற்றமாட்டார்; அவர் சொல்வது யாவும் உண்மை என்பது வெளிப்படை. இனி அவர் தமதிரித்துவத்தின் பரம இரகசியத்தை எப்படி வெளிப்படுத்தியிருக்கிறாரென்று புதிய ஏற்பாட்டின் உதவியைக்கொண்டு படிப்படியாக எடுத்துக் காட்டவேண்டும்.

இப்படி புதிய ஏற்பாட்டில் வெளிப்படுத்தப்பட்டுள்ளசத்தியத்தையே சின்னக் குறிப்பிடம் சுருக்கமாக எடுத்தோதுகின்றது. அதாவது,

சர்வத்துக்கும் கர்த்தராயிருக்கிறவர் சர்வேசுரன். ஒரே சர்வேசுரன் தான் உண்டு. அவர் தேவ சுபாவத்திலே ஒருவராயிருந்தாலும் ஆள் வகையிலே மூவராய் இருக்கிறார். இந்த மூன்றாட்களுக்கும் பிதா, சுதன், இஸ்பிரீத்து சாந்து என்று பெயர். பிதா வேறு, சுதன் வேறு, இஸ்பிரீத்துசாந்து வேறு. பிதாவும் சர்வேசுரன், சுதனும் சர்வேசுரன், இஸ்பிரீத்துசாந்துவும் சர்வேசுரன். ஆனால் மூவரும் மூன்று சர்வேசுரனல்ல, ஒரே சர்வேசுரன். எப்படியென்றால் இந்த மூன்றாட்களுக்கும் ஒரே ஞானம், ஒரே சித்தம், ஒரே வல்லமை, ஒரே தேவ சுபாவம் இருக்கிறபடியினாலே மூவரும் ஒரே சர்வேசுரன்தான்.

இது எப்படியிருக்கக்கூடும் என்றுதான் நமது புத்திக்குப்புலப்படவில்லை. ஏனெனில் பரிசுத்த திரித்துவத்தின் பரம இரகசியம் நமது புத்திக்கு மேற்பட்ட சத்தியம். இது நமது புத்திக்கு எட்டாததேயொழிய புத்திக்கு விரோதமானதன்று. ஏனெனில் சர்வேசுரன் எந்த வகையில் ஒருவராயிருக்கிறாரோ அதே வகையில் மூவராகவும் இருக்கிறார் என்று நாம் விசுவசிக்கிறதில்லை. சர்வேசுரன் சுபாவத்தில் ஒருவராயும், ஆள் வகையில் மூவராகவும் இருக்கிறார் என்றே நமக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது.

திரித்துவத்தின் சம்பந்தமாகச் சொல்லப்படுகிற எந்த வியாக்கியானமும் நாம் அந்தப் பரம இரகசியத்தின் ஆழத்தை அறியச் செய்ய முடியாது; அது நமது விசுவாசத்திற்கு வெளி உதவியாக நின்று, அந்தப் பரம இரகசியம் நமது புத்திக்கு மேற்பட்டதாயினும் அதற்கு விரோதமானதல்ல என்று மாத்திரம் நமக்குக் காண்பிக்கக்கூடும். மோட்சத்தில் நாம் சர்வேசுரனை முகமுகமாய்த் தரிசிக்கும்போது தான் தெய்வீக இயல்பின் அழகையும் ஒளியையும் ஆழ்ந்து பார்த்து நேசிப்போம்; அதிலிருந்து சொல்லொண்ணா பேரின்பம் அடைவோம்.

திரு மூர்த்திக்கும் தமதிரித்துவத்துக்குமுள்ள வித்தியாசத்தை கேட்கிறீர்கள்! முதலாவது இவ்விரண்டுக்கு ஏதாவது ஒப்புமை இருந்தால் தானே வேற்றுமையை எடுத்துச் சொல்லலாம். இங்கு தான் எவ்வித ஒப்புமையும் இல்லையே!



திரு மூர்த்திகள் தெய்வமோ அல்லவோவென்று நிச்சயிக்க அவர்களுடைய சரித்திரங்களைப் பரிசோதித்து ஆராயவேண்டும். அப்படி பரிசோதித்துப் பார்த்தால் அவர்களுக்கு பிறப்பும் துவக்கமும் உண்டென்று தெரிய வரும். மேலும் இவர்களுடைய விபரீத போக்கு நம் நாட்டில் காணக்கிடக்கும் பலவகைப் புராணங்களில் சொல்லியிருக்கின்றது. திரு மூர்த்திகள் என்று குறிக்கப்படும் மூன்று ஆட்களும் தனித் தனி சுபாவம் படைத்தவர்கள் என்பதும் தெளிவாகும். இதற்கு மேல் நாம் சொல்லகூடியது என்ன இருக்கிறது!

**கேள்வி : 2. சாதாரண பூசையில் குருவானவர் கடைசி ஆசீர்வாதம் அளிக்கிறார். ஆனால், மரித்தோர் பூசையில் அது இல்லை. இது எதனால்?**

**M. A. C. Melapalaiyam**

"சாதாரண பூசை" என்ற பெயரால் சர்வேசுரனுக்கும் அர்ச்சியசிஷ்டவர்களுக்கும் தோத்திரமாக ஒப்புக்கொடுக்கும் திருநாட் பூசைகளைக் குறிப்பிடுகிறீர்கள் என்று நினைக்கிறேன். உத்தரிக்கிற ஸ்தல ஆத்துமாக்கள் சாந்தியடையும்படியாக ஒப்புக்கொடுக்கப்படும் பூசை மரித்தோர் பூசை. பொதுவாகப் பார்க்கும்போது திவ்விய பலிப் பூசையின் பிரதான பாகமாகிய பலிக்கிரிகை நம்முடைய இரட்சகராகிய யேசுக் கிறிஸ்துநாதராலேயே ஏற்படுத்தப்பட்டது. பலி முறை சரிவர நடந்தேறுவதற்கான ஒழுங்குச் சட்டதிட்டங்களை கிறீஸ்துநாதரின் பத்தினியாகிய திருச்சபையே வகுத்திருக்கின்றது. அந்த ஒழுங்குத் திட்டப்பிரகாரம் மரித்தோர் பூசையில் கடைசி ஆசீர்வாதம் கொடுப்பதில்லை என்பதே முடிவான வாக்கு. இது ஏன் என்று ஆராய்வோமாயின், மரித்தோருக்காக ஒப்புக்கொடுக்கும் பூசையில் இந்தக் கருத்துக்குரிய துக்கக் குறிகளை விசுவாசிகளின் மனக்கண் முன் கொண்டுவரு முறையில், பொதுவாக பூசையில் நிறைவேறுகின்ற, ஆசீர்வதிப்பதுபோன்ற சந்தோஷத்தைக் குறிக்கும் மங்களகரமான சயிக்கினைகள் தவிர்க்கப்படுகின்றன என்று ஊகிக்கலாம்.

**கேள்வி : 3. இப்போது குருவானவர் ஞாயிறு பூசை கடைசியில் லத்தீனில் செபம் செய்கிறார், பாடகர்கள் பதில் சொல்லுகிறார்கள். இது என்ன கருத்துகளுக்காக?**

**M. A. C. Melapalaiyam**

நீங்கள் குறிப்பிடும் இந்தசெபம் தமிழ் நாட்டின் பல கோவில்களிலும் தமிழிலேயே சொல்லப்படுகிறது. ஞாயிறு பூசை முடிந்த உடன் இந்த செபத்தை சொல்ல வசதியில்லாத சில இடங்களில் இது ஞாயிற்றுக்கிழமை திவ்விய நற்கருணை ஆசீர்வாதம் முடிந்த உடன் சொல்லப்படுகிறது. பங்களூர் பரிபூரண பொதுச் சங்கத்தின் சட்டங்கள் அமுலானது முதற்கொண்டு இந்தச் செபம் சொல்லப்பட்டு வருகின்றது. இது நாட்டின் நலனைக் கருதி நாடெங்கும் சொல்லப்படுவதாகும். கத்

தோலிக்கர் நேர்மையான நாட்டுப் பற்றுள்ளவர்கள்; கத்தோலிக்கு மதம் நாட்டுப் பற்றுக்கு இடையூருக இருக்கமுடியாது என்பதற்கு இதுவே தகுந்த சான்றன்ருே? இந்த செபத்தின் தமிழாக்கத்தை கீழே தருகிருேம் :

## நமது நாட்டின் நலனுக்காக மன்ருட்டு

—

குரு ;—ஆண்டவரே! எமது நாட்டைக் காப்பாற்றும்,

சபை :—உம்மை கூவி அழைக்கும் இன்று எமக்கு செவிசாய்த்தருளும்.

குரு :—ஆண்டவரே! என் மன்ருட்டை கேட்டருளும்.

சபை :—எம் குரல் சத்தம் உம் சந்நிதி மட்டும் வரக்கடவது.

குரு :—ஆண்டவர் உங்களோடிருப்பாராக.

சபை :—உமது ஆத்துமத்தோடும் இருப்பாராக.

### பிரார்த்திக்கக்கடவோம்

ஆண்டவரே என்றும் கன்னிகையான பரிசுத்த மரியாயின் மன்ருட்டிற்கிணங்கி ஒரே குடும்பமாகவுள்ள எம்மை பாதுகாக்க இறைஞ்சுகிருேம். முழு மனதோடு உமது திருமுன் சாஷ்டாங்கமாய் விழுந்துகிடக்கும் எங்களை எங்கள் எதிரிகளின் சற்பனைகளிலிருந்து தயவாய் காத்தருளவும் மன்ருடுகிருேம். எங்கள் ஆண்டவராகிய சேசுக்கிறீஸ்துநாதருடைய திரு முகத்தைப் பார்த்து இந்த மன்ருட்டை எங்களுக்குத் தந்தருளும்,

சபை :—ஆமென்.

குரு :—சர்வேஸ்பரனுடைய உதவி நம்மோடு என்றும் தங்குவதாக.

சபை :—ஆமென்.






## சிறுவனின் செபம்

தந்தை இனிகோ பாருமே - எந்தன் குறையைத் தீருமே
மந்தப் புத்தி உள்ளயான் - கெட்டிக்காரன் ஆகவே

கெட்டிக் காரன் ஆகியே - கல்வி கற்றுத் தேறவே
கல்வி கற்றுத் தேறியே - கல்லூ ரியில் படிக்கவே

கல்லூ ரியில் படிப்பதில் - கடவுள் அன்பில் வளரவே
கடவுள் அன்பில் வளர்ந்ததும் - குரும டத்தில் சேரவே

குரும டத்தில் சேர்ந்தபின் - கடவுள் குருவாய் ஆகவே
கடவுள் குருவாய் ஆகியே - தினமும் பூசை செய்யவே

தினமும் பூசை செய்வதால் - பிறருக் குதவி செய்யவே
பிறருக் குதவி செய்வதில் - பயனைக் கருதா துழைக்கவே

அண்ணன் சேசு நேசமும் - அம்மா மாமரி பாசமும்
அதிகம் அதிகம் அடைந்துநான் - அகில உலக மக்களின்

உள்ளத்தில் அவற்றை நிரப்பவும் - உயர்மெய் மறையைப் பரப்பவும்
உன்னத இறைவன் புகழையே - உள்ள மதிலே கொள்ளவே

உயிரும் தந்து உழைக்கவே - உமது உதவி வேண்டுமே
உலகுக் குதவும் வள்ளலே - உம்மிடம் உரைத்தேன் இஞ்ஞாசியே.

*ஜெயராஜ்*



## ஜூலை 31

வானம் சிறிது மப்பு மந்தாரமாயிருந்தாலும், அங்கே ஏகப்பட்ட கூட்டம். எள் போட இடமில்லையென்றுகூடக் கூறிவிடலாம். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என் முன்னே யிருந்தவர்களை சிறிது விலக்கி முன்னேறிச் சென்றேன் மேடையை நோக்கி. மேடை முழுதும் ஒரே அலங்காரம். பட்டுத் துணிகளென்ன, இரத்தின மிழைத்த கம்பளங்களென்ன, பந்தல் தேவலோகமாகவே காணப்பட்டது.

சிறிது நேரத்தில் மணிகள் பல ஒலிக்க எல்லோரும் கிழக்குத் திசையை நோக்கிப் பார்த்தார்கள். ஆம், நானும் என் கண்களைத் துடைத்துவிட்டு அத்திசையை உற்று நோக்கினேன். பலர் பிரகாசமான உடையணிந்துகொண்டு மேடையை நோக்கி வந்தனர். தங்கள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்துகொண்டனர். மேடையில் வீற்றிருந்தவர்களில் ஒரு மாதரசியும் இருந்தாள். அவள் வதனத்தையே நான் உற்றுநோக்கிக்கொண்டிருந்தேன்.

திடீரென அவள் எழுந்து தனக்கு அடுத்தாற்போல் அமர்ந்திருந்த ஆண்மகனை அறிமுகம் செய்வித்தாள். "பிரிய மகன் இஞ்ஞாசியே, நீ உலகில் வாழ்ந்தமட்டும் எனக்காகவும் என் திருமகனுக்காகவும் அளவிடமுடியாத் தொண்டு செய்தாய். 'சர்வேசுரனின் அதிமிக தோத்திரத்துக்காகவே' நீ உன் வாழ்நாள் முழுதும் செலவழித்தாய். அத்துடன் நீ என் பேரில் கொண்ட பற்றைக் கூறவும் வேண்டுமா! என்னைத் தூஷணித்த மகமதியனை விரட்டிச் சென்றது இன்னும் என் ஞாபகத்திலிருக்கிறது" உடனே எல்லோரும் கலகலவென்று சிரித்தனர். நானும் கஷ்டப்பட்டுக்கொண்டு உதட்டை இங்குமங்குமாக அசைத்து சிறிது புன்முறுவல் பூக்க முயன்றேன். மறுபடியும் அவள் தொடர்ந்து "இன்று நீ இறந்து 400-ம் வருட விழாவை உலகெங்கும் கொண்டாடுகின்றனர். இங்கும் இவ்விழாவை நாம் மிகச் சிறப்புடன் கொண்டாடுவோம். என் வாழ்த்து உமக்கு" என்று கூறிவிட்டு உட்கார்ந்தாள். எல்லோரும் தம் பலம் கொண்டமட்டும் கைகளைக் கொட்டி இரைந்தனர். நான் மட்டும் பேசாதிருக்கக்கண்ட நண்பரொருவர் பின்புறத்திலிருந்து என் முதுகில் அடித்து கைதட்டும்படி கூறினர். அவர் யாரென்று பார்க்கத் திரும்பினேன். நான் படுத்திருந்த கட்டிலினின்றும் விழுந்துவிட்டதாக அறிந்தேன். உடனே எழுந்து அங்கு படுத்திருந்த யாருக்கும் தெரியாமல் மெதுவாகக் கட்டிலில் ஏறிப் படுத்துக்கொண்டு போர்வையை இழுத்துப் போர்த்தினேன். ஆலய மணி அலறவே எழுந்து பல் துலக்கிவிட்டு இஞ்ஞாசியார் திருநாள் பாடற் பூசை காண கோவிலை நோக்கி விரைந்தேன்.



— இ. ராஜ



அர்ச். லொயோலா இஞ்ஞாசியாரின் வாழ்விலே எனக்குப் பிடித்த ஓர் சம்பவம்

## மாவீரரது மனப்போரின் மங்கள முடிவு

(ச. ரூபின், 6-ம் படிவம், தூய மரியன்னை உயர்தரப்பள்ளி, மதுரை)

காட்டுப் புலி கூண்டுப் புலியானது. இளஞ் சிங்கம் இறுமாப்பை இழந்தது. நீரில் நீந்தி விளையாடிய மீன் கரையில் இடப்பட்டது. ஆம். வாழ்வுப் பாதையிலே வளமாக முன்னேற முயன்ற லொயோலா வீரர் தன் கால்களை இழந்தார். கோட்டைச் சுவரை நோக்கி கோபாவேசமாய் வந்த குண்டு கோமான் இஞ்ஞாசியாரின் காலை முறித்துவிட்டது, இனி எக்காலமும் இஞ்ஞாசியாரின் கால் நல் நிலையை அடையாது.

ஐயோ கோட்டையைத் தாக்க வந்த குண்டு இஞ்ஞாசியாரின் மனசு கோட்டையைத் தகர்த்துவிட்டதே.

வேல் முனையிலே வெற்றிகாண விரும்பிய வீரர் நொண்டியாகி, வெதும்பி வேகும் காலம் வந்ததே. வீரம், பெருமை, காதல் இவற்றைத் தவிர வேறொன்றையும் அறியாத வீரர் எவ்வகையில் இவ்வுலகில் முன்னேறக்கூடும்? காலை இழந்து, காதலை இழந்து, கற்பனைகளையும் இழந்து, கட்டிலில் கிடந்தார் மாவீரர்.

மனதிலே போராட்டம் பல. அதை மறைக்க முயற்சி பல. ஆனால் அத்தனையும் அருகதையற்றுப் போயின. வாசகத்தின்வழியே வேதனையை விரட்டவேண்டி, நாவல்களையும், நல்ல கதைகளையும் தேடினர். ஆனால், அவையெல்லாம் எங்கோ ஓடி மறைந்தன. படைவீரரை பரலோக வீரராக்கும் நோக்கத்தோடோ, என்னவோ அந்நேரத்தில் கிறிஸ்து வேந்தரின் வாழ்க்கைச் சரித்திரங்களும், தேவ திருத்தொண்டர்களின்வரலாறுகளும் புன்னகையுடன் அவர்முன்பு கிடந்தன. நாவல்களின் பஞ்சத்தால் வேண்டா வெறுப்புடன் வெறித்துப் பார்த்து படித்துக்கொண்டிருந்தார் அம்மகான்களின் வரலாற்றை.



என்ன விந்தை! அருவருப்புடன் அவற்றை வாசித்த லொயோலா வீரனின் உள்ளத்திலே அவை தேவ சிநேக அக்கினியை மூட்டின. மேலும் மேலும் சேவாவீரர்களது தீர வீரச் செயல்கள் லொயோலா வீரரை திருமறைவீரராக்கத் துணைசெய்தன.



வீர இதயம் சிந்தனைப் பொய்கையில் ஊறிக்கிடந்தது. தான் மறுபடியும் தானைத்தலைவனாய்த் திகழ வேண்டும், உலகம் போற்றும் உறுதியாளனாய், பெண்சமுதாயம் விரும்பும் வீரனாய் வாழவேண்டும். இவ்வாறு ஒருபுறம். ஆனால் மறுபுறம் கிறிஸ்துவ தளபதிகளின் பரலோக வீரதீர பாக்யங்கள். அப்பப்பா ; வீரரின் உள்ளத்திலே ஓர் மாபெரும் போர். இந்த கலவரமான நிலவரத்திலே தேவதாய் லொயோலா வீரரின் முன்பு தன் திருமகனுடன் தோன்றி மறைந்தாள். இவ்வுலக வீரர் பூவுலக வீரரானார். கலங்கரை விளக்கத்தைக்கண்ட கப்பற்றலைவனைப்போல் துள்ளினார் நம் லொயோலா. தீரரின் சிந்தையிலே தீவிரமான தீர்மானங்கள் தீட்டப்பட்டன. எதற்கு ஆசாபாசங்களில் திளைக்கவா ? அல்ல. கிறிஸ்துவின் தளபதியாய்த் திகழவேதான்.

---

## தேவதாயின் மட்டில் பக்தி



(M. அருள்சாமி, 8-ம் வகுப்பு, ராஜா தினகர் ஆர். ஸி. உயர்தர ஆரம்பப் பாடசாலை. இராமநாதபுரம்)

அர்ச். இஞ்ஞாசியாருடைய சரித்திரத்தில் எனக்குப் பிரியமான பாகம் அவர் தேவதாயின் மட்டில் கொண்டுள்ள பக்தி. அதாவது ஓர் சந்தர்ப்பத்தில் அர்ச். இஞ்ஞாசியார் 'மொன் செராத்' என்ற தேவதாயின் திரு ஸ்தலத்திற்குத் திரு யாத்திரையாகப் போனார். சிறிது தூரம் போனதும் அதே வழியாகச்சென்றுகொண்



டிருந்த ஒரு மகமதியரைச் சந்தித்தார். இருவருமாகப் பல காரியங்களைப் பற்றிப் பேசிக்கொண்டு போகையில், தேவதாயின் கன்னிமையைப் பற்றியும், சேசுவின் அற்புதப் பிறப்பைப்பற்றியும் இருவருக்கும் தர்க்கம் எழும்ப, அர்ச். இஞ்ஞாசியார் பற்பல ஞாயங்களைக்கொண்டு தெளிவித்தார். மகமதியர் சேசுவின் பிறப்பை ஏற்றுக்கொண்ட போதிலும் தேவதாயின் கன்னிமையை ஏற்றுக்கொள்ள மறுத்தான். அர்ச். இஞ்ஞாசியார் இன்னும் அநேக அத்தாட்சிகளைக்கொண்டு வெகு ஊக்கத்தோடு ஆணித்தரமாகப் பேசினார். என்றாலும், மகமதியர் ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்குள்ளாக இருவரும் பிரிய நேர்ந்தது. சிறிது தூரம் போனதும் இஞ்ஞாசியாருடைய மனது நிம்மதியின்றி ஆத்திரம் பொங்க, தேவதாயின் கன்னிமையைப் பற்றிக் குறைவாகப் பேசினவனை சும்மா விட்டேனே ; தேவதாயின்மீது எனக்குள்ள பக்தி இவ்வளவுதானா ? என்று மனம் வருந்தினார். பின் ஓர் எண்ணம் உதித்தது. குதிரையின் கடிவாளத்தை விட்டுவிடுவது. குதிரை மகமதியர் போன வழி திரும்பினால் அவரை கொன்றுவிடுவது. அவ்வழி திரும்பா விட்டால் அவரை மன்னித்துவிடுவதென்று தீர்மானித்தார். குதிரை அவ்வழி திரும்பாததால் மகமதியர் தப்பினார்.

இச்சம்பவத்திலிருந்து அர்ச். இஞ்ஞாசியார் தேவதாய் மட்டில் எவ்வளவு ஆழ்ந்த பக்திகொண்டிருந்தாரென்று தெளிவாகிறது. அதுபோல நாமும் தேவதாயார் மட்டில் உருக்கமான பக்தி வைத்து, தாயைப்பற்றி விரோதமாகப் பேசுகிறவர்களை தகுந்த ஞாயங்களைக் கொண்டு தெளிவிப்போம். அல்லது அவர்களுக்காக தேவதாயிடம் வேண்டிக்கொள்வோம்.

---

## பிறர் ஆத்தும ஈடேற்றமும் லொயோலா வீரரும்

(மா. குழந்தைச்சாமி, 5-ம் படிவம்,
சேசுவின் திரு இருதய இல்லம், பாளையங்கோட்டை)

தன் ஆத்தும விஷயங்களில் வெகு அஜாக்கிரதையாய் இருந்த ஒரு சாஸ்திரியார் வீட்டிற்கு ஒருநாள் இஞ்ஞாசியார் போகும்படி நேர்ந்தது. அச்சமயம் சாஸ்திரியார் 'பிலியர்ட்ஸ்' என்று சொல்லப்படும் ஒருவகை மேஜைப் பந்தாட்டம் விளையாடிக்கொண்டிருந்தார். இஞ்ஞாசியாரைக் கண்டதும் அவரை உபசரித்து, மரியாதையினிமித்தமோ அல்லது தமாஷாகவோ தன்னுடன் விளையாடும்படி அழைத்தார். இஞ்ஞாசியார் துவக்கத்தில் சம்மதிக்கவில்லை. என்றாலும் சாஸ்திரியார் மேன்மேலும் விரும்பிக் கேட்க, தம் உள்ளத்தில் உண்டான ஏதோ



ஒரு பரலோக ஏவுதலை பின்சென்று, நான் தோல்வி அடைந்தால், ஒரு மாத காலம் உமக்கு ஊழியனாயிருந்து நீர் இடும் வேலைகள் யாவும் செய்துவருவேன். நான் ஜெயித்தாலோ நீர் நான் சொல்லும் ஒரே ஒரு காரியம் மாத்திரம் செய்தால் போதும். அதுவும் உமக்கு நன்மையாகத்தான் இருக்கும்'' என பந்தயங்கூறினார்.

நல்லது என்று சாஸ்திரியார் சம்மதிக்க, இருவரும் விளையாட ஆரம்பித்தார்கள். இஞ்ஞாசியார் ஜெயம்கொண்டார். பந்தயப்படி என்ன கேட்கப்போகிறாரோ என்று தயக்கமுற்று நின்றார். இஞ்ஞாசியார் வேறொன்றும் கேட்கவில்லை. சில நாள் ஒடுக்கத்திலிருந்து தமது ஞான முயற்சிகளை மாத்திரம் செய்யும்படி கேட்டார். அர்ச்சிய சிஷ்டவர் முன் சொன்னதுபோல் இது சாஸ்திரியாருக்கு நன்மையாகவே முடிந்தது. அதுமுதல் அவர் தன் ஜீவியத்தை ஒழுங்குபடுத்தி, நல்லொழுக்கத்தைக் கைக்கொண்டு நடந்துவந்தார்.

அர்ச். லொயோலா இஞ்ஞாசியாருடைய திருநாளாகிய பெருநாள் ஜூலை மாதம் 31-ம் தேதி வருகிறது. ஆதலால் நாமும் நமது அந்தஸ்துக்கு தகுந்தபடி ஞான உபதேசம் சொல்லிக்கொடுப்பதிலும் பிறர் ஆத்தும ஈடேற்றத்திலும் கவலை எடுத்துக்கொள்ளவேண்டும்.

---

## சிறுவரின் தூதன் பரிசு

இம்மாதத்தில் எழுதுவதற்கான பொருள் :

"திருச் சிலுவை"யைப் பற்றி

**ஒரு கதை** அல்லது **கவிதை**

எழுதுவது 30 வரிகளுக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். உன் பெயர், வயது, வகுப்பு, ஊர் இவற்றைக் குறித்து சுவாமியார் அல்லது ஆசிரியரின் கையொப்பத்துடன் ஜூலை மாத முடிவிற்குள் வந்து சேரும்படி கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

**மானேஜர்**
திரு இருதயத்தூதன்
செயின்ட் மேரீஸ், த. பெ. 56
மதுரை.

Manager
The Messenger of the Sacred Heart
St. Mary's, P. B. 56.
MADURAI.

# சிலுவைப் பாதை

ஜே. யம். ஞானதிக்கம் சே. ச.

### 6-ம் ஸ்தலம் : சேசுவின் முகத்தை வெரோனிக்கா துடைக்கிறாள்

இருந்தாற்போல் இரு வெண் கரங்களைக் காண்கிறோம். அக் கரங்களில் இருக்கும் மெல்லிய நுண்துண்டு அவளது தங்கமான இருதயத்தின் அடையாளம். சேசுவின் சுந்தரம் வடியும் முகத்தில் உள்ள இரத்தத்தையும், வியர்வையையும் தூசியையும், உமிழ் நீரையும் அத்துகிலைக்கொண்டு துடைத்தாள். இப்புண்ணிய கைங்கரியத்திற்குச் சன்மானமாக, அத்துவாலையில் அசங்கிதமான இரத்தமும் உமிழ்நீரும் சேர்ந்த கறையல்ல, ஆண்டவரின் அழகிய சுவர்ண ரேகையின் முகச்சாயல் பதிந்தது.



சேசுவே, இப்பெண் ரத்தினம் என்பாவங்களின் அருவருப்பான உமிழ் நீரைத்தான் துடைத்தாள். இப்பொழுது அப்பாவங்களை வெறுக்கிறேன். அவைகளைக் கட்டிக்கொண்ட துரோகியையும் அருவருக்கிறேன். ஆனால் கடவுளின் கிறீஸ்துவே, அத்துரோகி மாண்டான்; அவன் ஒருநாளும் உயிர்க்காமல் எழும்பாமல் இருப்பானாக. முகத்தாட்சணியத்திற்கு மரித்தவளாய் (முகத்தாட்சணியத்தைச் சட்டை செய்யாமல்) இருந்த அப்பெண்ணைப்போல் நான் இனிமேல் இருப்பேனாக. கேலியும் பகடியும் செய்யும் இழிவான கூட்டத்தை அவள் இலட்சியம் செய்யவில்லை. குரூர உரோமைச் சேவகர்கள், வல்லமை பூண்ட உரோமை அதிகாரத்தின் ஆட்கள் என்று அவள் அஞ்சவில்லை. அவள் மற்ற யாவரையும் பார்க்கக் கண்ணற்றவளாய் உம்மை ஒருவரையே கண்டாள். உம் வாதனையில் உம்மைக் கண்டுகொண்டாள். அத்தகைய பார்வையை எனக்களித்தருளும். வெரோனிக்காவின் துகிலைப் போல என் சீவியத்தை, என் ஆண்டவரே, உமக்கு நேர்ந்து கொள்ளுகிறேன். அத்துகில் உம் சாயலைக் கிரகித்துக்கொண்டது போல, என் வாழ்நாளில் ஒவ்வொரு விநாடியும் உம் சாயல் அதில் பாவோடி உமக்கு ஆறு

தல் அளிக்கவேண்டும். என் வாழ் நாளாகிய துவாலேயில் உம் அழகிய சாயல் பதிந்திருப்பதாக. அப் பெண்ணின் துகிலில் நீர்ப்பதித்த உம் திருச்சாயலே என் ஆத்துமத்தி லும் சரீரத்திலும் பதித்தருளும். அப்பொழுது கிறீஸ்துவஞை என்னேப் பார்க்கிறவர்கள், அன் பும் துணிவும் நிறைந்த சேசுவே, உம்மைப் பார்க்கவேண்டும் என் பது என் ஆசை.

கிறீஸ்துவே, இதுதான் பூசை யின் காணிக்கை நேரம். பூசையில் இந்நேரத்தில் குருவானவரிடம் ஒரு துவாலேகொடுக்கப்படுகிறது. அதை உபயோகிக்கு முன் தெய் வீகத்தில் தனக்கொரு பங்கு கொடுக்கும்படி வேண்டிக்கொண் டார். என் விஷயத்தில் அச் செபம் பலித்துவிட்டது. நான் உம் அவயவம் அல்லவா ? உம் தெய்வீ கம் செய்ததுபோல நான் செய்ய வேண்டாமா ? என் சீவியம் ஒரு பூசையாக வேண்டும். உம்மைப் போல நானும் குருவும் பலியுமாக வேண்டும். ஞானஸ்நானத்திஞல் என்னேக் குருவாக்கனீர். வெரோ னிக்காவின் துகிலேப்போல என் ஜீவியத்தை உமக்கு நேர்ந்துகொள் ளுவதஞல், நான் பலியாக வேண் டும்.

கிறீஸ்துவின் பலம் நிறைந்த ஆத்துமமே, என்னே இரட்சியும். கிறிஸ்துவின் இரத்தம் ஊற்றும் சரீரமே, என்னே இரட்சியும். கிறீஸ்துவின் உதாரமுள்ள இரத் தமே, என் இரத்தத் தாரைகள் யாவையும் நிரப்பும். ஏனெனில் பலியாகும் அவயவமாக நான் இருக்க வேண்டும்.

அன்னே மாமரி நான் என்ன ஆவது தேவை, அவசியம், எனது ஆசை என்பதை யறிந்து அதை எனக்குப் பெற்றுத் தந்தருளும்.

---

## உங்களுக்குத் தெரியுமா ?—பதில்

1. அநீத காரியஸ்தன் உவமையிலிருந்து (லூக். 16 : 1-9) கற்பிக் கப்படுகிறது.

2. அப்போஸ்தலரும், முதல் பாப்பானவருமான அர்ச். இராயப்பர் ஒருவரே.

3. திவ்விய நன்மை கொடுக்கும் கிராதிக்கு வெளியே இருந்து குரு வானவர் ஜெபத்துக்குப் பதில் சொல்லுவதால் மாத்திரம்.—இந்நிலேயில் குரு வானவர் தாமாகவே மற்றக் காரியங்களேச் செய்து கொள்வார்.

4. சேசு சபை.

5. திரிதந்தின் பொதுச் சங்கத்தின் சட்டப்படி மிகக் குறைந்த வயது 30.

6. அர்ச். அன்னம்மாள் [ திருநாள் ஜுலே 26-ம் தேதி ]

# பாரத நாட்டிற்குப் பரிசு !

[அலெக்ஸ் ராய்]

1498-ம் ஆண்டு கள்ளிக் கோட்டை கடற்கரை குரு ஒருவர் மரத்துடன் பிணிக்கப்பட்டிருக்கி ருர். அவருடைய உடல் அம்பு களால் ஊடுருவப்படுகின்றது. உயிரைப் பலி கொடுத்த அந்த உத்தம குரு வாய்திறந்து சில பொன்மொழிகளேப் பகர்ந்தார். 'இன்னும் சில வருடங்களில் திருச் சபையில் ஓர் சேனே தோன்றும். அச் சேனே சேசுவின் திவ்விய பெயரைத் தாங்கி நிற்கும். அச் சேனேயின் தவப் புதல்வர்களில் ஒருவர் பாரத நாட்டிற்கு வந்து பரமனின் வழியை விளக்குவார். பலர் சேசுபிரானின் போதனே யைப் பின்பற்றுவர்'' என்று சொல்லி உயிர் நீத்தார்.

“இந்த தீர்க்க தரிசனத்தில் குறிக்கப்பட்டுள்ள சேனே எது?... தவப்புதல்வன் யார்?...அவர் பாரத நாட்டிற்கு வரும்படி அவரைத் தூண்டியது யார்...?'' எனும் கேள்விகள் எழுகின்ற தல்லவா ?

இதெல்லாம் ஓர் அற்புதக் கதை கேளுங்கள் !

பதினெட்டு வயது கட்டழகு வாய்ந்த காளேப் பருவம். வாலிபன் புகழைத்தேடி தன் சொந்த நாட்டைவிட்டு பாரீஸ் பட்ட ணத்து சர்வ கலாசாலேயை நோக் கிச் செல்கின்ருன். பேரும் புக ழும், செல்வாக்கும் அவனேத் தேடி வருகின்றன. கல்வியைக் கரைத்துக் குடிக்கின்ருன். கலேஞு ஞகின்ருன். கல்வியைக் கற்பிப் பதில் நிபுணன் என்று பெயர் பெறுகின்ருன். குலப்பெருமை யோடு இப்போ. கலேப்பெருமை யும் கிடைத்து விட்டது. கேட்கவா வேண்டும்? தற் பெருமை, ஆணவம், மேட்டிமை என்னும் துர்க்குணங்கள் தலே காட்ட ஆரம்பிக்கின்றன. பாரீஸ் பட்டணத்து பகட்டுகள் ஊனக் கண்களேயும் உள்ளக் கண்களேயும் ஒருங்கே கவர்கின்றன. பிறர் கூறும் புகழுரையும், முகஸ்துதி



யும் மயக்கத்தைக் கொடுக்கின்றன. ஆபத்து அடுத்து வருகிறது. பாவப்படுகுழி பக்கத்திலிருக்கிறது !

அந்தோ ! இந்த வாலிபனின் கதி என்ன ஆவது ? இலௌகீக ஞானத்தைத் தேடிச் சென்ற இவ் விளங்காளை இந்த மாய ஞானத்துக்கு இரையாகிவிடுமோ ? புகை போல மறைந்து போகக்கூடிய புகழை நாடிச் சென்ற இப்புதல்வனுடைய பெயரும் மங்கி மறைந்து விடுமோ ?

இல்லை. ஆண்டவனின் வழிகள் ஆச்சரியத்துக்குரியவை! ஆபத்து அடுத்து வந்ததும், அவனை அண்டிவந்தார் அருள் நிறை ஆண்டவன். எப்படி அன்றொருநாள் சவுலை பவுல் என்ற அப்போஸ்தலனாக மாற்றினாரோ, அப்படியே இன்று இந்த வாலிபனையும் ஓர் அப்போஸ்தலனாக மாற்றினார். என்னே ! தெய்வத் திருவருள் !

பிரான்சிஸ் சவரியார் இவ்வுலகப் பெருமையில் மக்கள் புகழுரையில் மயங்கி நிற்கின்றார். அச்சமயம் பாரீஸ் கலாசாலையில் இன்னொரு மாணாக்கன் படித்து வருகின்றார். அம்மாணாக்கன் ஓர் விசித்திரமான மனிதன், அற்புதப் பிறவி. முகத்தில் பிரபுக்குல விளக்கம் ஜொலிக்கிறது ; அணிந்திருந்த ஆடைகளோ ஏழைகளுக்குரியவை! கெம்பீரத் தோற்றம்; செய்வதோ தாழ்மையான வேலைகள். ஆம், இந்த மாணாக்கன் கலாசாலையில் யாவருக்குமே ஓர் புதிர் !...சேசுபிரான் அன்பால் பிணைக்கப்பட்டு, உலகத்தின் உயர்வு பெருமைகளையெல்லாம் உதறித்தள்ளி, தவக்கோலம் பூண்டு, தாழ்ச்சியின் அணிகலனாக விளங்கிய இஞ்ஞாசியார் இவர் தான் !

இஞ்ஞாசியார் சவரியாரைப் பார்த்தார். அவர்மேல் அன்பு கொண்டார். தமது கூரிய புத்தியால் சவரியாரின் உள்ளத்தில் படிந்து கிடந்த உயர் குணங்களை உணர்ந்தார். அவர் இருந்த ஆபத்தான நிலைமையையும் நன்கறிந்தார். அவரைக் காப்பாற்றுவது தமது கடமை என்று கொண்டார். ஓர் உத்தமன் உலகப் பெருமைக்காக தன் வாழ் நாட்களை வீணாகக் கழிப்பதா ? சேசு பிரானின் சேவையில் சவரியாரைச் சேர்ப்பது கூடாத காரியமா ? இல்லை... சவரியாரை சேசுவின் அன்புப் பிரவாகத்தை அறியும்படி செய்ய வேண்டுமென்று ஆசித்தார்; ஜெபித்தார், தவமிருந்தார். ஜெப தபத்தின் பலனாக, சவரியாரைப் பார்த்து சவரி ! மனிதன் உலகெலாம் ஆதாயமாகக் கொண்டாலும், தன் ஆத்துமத்தை இழந்து போனால்...'' என்று அடிக்கடி கேட்க ஆரம்பித்தார்.

சவரி இவ்வார்த்தைகளைச் சட்டை செய்யவில்லை. ஏதோ ஞானப்பித்துக் கொண்ட ஓர் மனிதன் பிதற்றுகிறான் என்று கருதினார். ஆனால், உண்மையை எத்தனை காலம் எதிர்த்து நிற்கக் கூடும் ? வர வர, இவ்வார்த்தைகளில் பொதிந்துள்ள பெரிய உண்மை சவரியின் மனதிற்பட்



டது. தன் ஆத்துமத்தின் விலை மதிப்பை உணர்ந்தார். திருவருளும் சவரியார் உள்ளத்தில் வேலை செய்ய ஆரம்பித்தது. ஜீவியம் மாறுபட்டது. உலகம் சதமல்ல என்பதை உணர்ந்தார். வாழ்க்கையின் உயர் நோக்கத்தை அறிந்தார். சேசுவின் அன்பிற்காகச் சீவிப்பதே வாழ்க்கை எனக்கொண்டு, இஞ்ஞாசியாரிடம் ஞானத் தியானம் செய்ய ஆரம்பித்தார். அன்றே அவர் புது மனிதனானார்; அவரிடம் தெய்வீக வரப்பிரசாதம் ஜோதிவிட்டுப் பிரகாசித்தது; சேசுபிரான் மட்டில் அன்பு சுடர்விட்டு எரிந்தது. தெய்வ சிநேகம் பிறர் சிநேகத்தைத் தூண்டிவிடுமல்லவா ? ஆத்துமங்களுக்காக அயராது உழைக்கவேண்டுமென்ற பெரிய ஆசை உந்தித் தள்ளியது. "ஆத்துமங்கள், ஆத்துமங்கள்'' என்று அங்கலாய்த்தார். உடல், உள்ளம், உயிர் அனைத்தையும் ஆத்ம இரட்சணிய அலுவலில் அர்ப்பணம் செய்ய ஆசித்தார். உலகப் பெருமை உப்பற்ற, உபயோகமற்ற பொருள் எனக் கண்டார்; அதை வெறுத்தார். சேசுவின் சிநேகம் ஒன்றே மெய்ப் பொருளாக விளங்கிற்று ; அதை விரும்பினார். தற்பெருமை போய் தாழ்ச்சியின் சுகந்தம் வீசிற்று. சுயநலம் கருதாது, பிறருக்காக வாழும் உயர்நலக் கொள்கையைக் கடைப்பிடித்தார். தபசு ஒறுத்தல் செய்து சிலுவைநாதனைச் சிந்தித்த வண்ணமிருந்தார். புது சவரியாரைக் காணக்காண, இஞ்ஞாசியாரின் உள்ளம் பூரித்தது. சவரியாரை தன் உயிராக நேசித்தார் ; உன்னத கடவுள் தனக்களித்த ஒப்பற்ற பரிசாகக் கொண்டார் !

1541-ம் ஆண்டு, ஓர் பெருநாள்; புண்ணிய நாள்; புனித நாள். தான் கண்ணாகப் பாவித்துவந்த சவரியாரை இஞ்ஞாசியார் நம் பாரத நாட்டிற்கு காணிக்கையாக, பரிசாக வழங்கினார். பூர்வ காலத்தில் அபிராகாம் தன் செல்வக் குமாரன் ஈசாக்கைப் பலியாகக் கொடுக்கும்படி கட்டளை பிறந்ததல்லவா ? அப்படியே, இன்று இஞ்ஞாசியார் தன் செல்வக் குமாரனை சேசுவின் வேலைக்காக இந்தியாவிற்குப் பரிசாக, பலியாகக் கொடுத்தார். தகப்பனும் பிள்ளையும் ஒருவர் ஒருவரை விட்டுப் பிரிந்தனர்.

இஞ்ஞாசியார் நமக்குக் கொடுத்துச் சென்ற பரிசின் மதிப்பை அறிந்துள்ளோம். சவரியார்



இந்திய மக்களின் ஞானத்தந்தை என்ற உண்மையை சரித்திரம் எடுத்துக் கூறுகின்றது. பரிசு கொடுத்துச் சென்ற புனித வள்ளலுக்கு நாம் காட்டும் நன்றி என்ன? செய்யும் கைம்மாறு யாது?

இதோ! அப்புனிதர் மறைந்து சரியாய் 400 ஆண்டுகள் ஆகின்றன. இந்த நான்காம் நூற்றாண்டு வைபவத்தை நன் முறையில் செலவிட வேண்டாமா? இஞ்ஞாசியார் சவரியாரைப் பரிசாக வழங்கினார்; சவரியாரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி பணியாற்றிவரும் ஆயிரம் ஆயிரம் குருக்களையும் சந்நியாசிகளையும் கொடுத்தார். அவர்கள் சேசுவின் அன்புச் சேவையில் ஈடுபடத் தூண்டும் ஞான முயற்சிகளை அவர்கள் கையில் பொக்கிஷமாகக் கொடுத்தார். "ஞான முயற்சிகளின்" ஞானக் கனிகளை இந்திய மக்களுக்குத் தாராளமாகக் கொடுக்கக் கட்டளையிட்டார். சேசுசபை என்னும் செவ்விய சேனையை இந்தியாவிற்கு அந்த நாளிலேயே கொடுத்துச் சென்ற இந்த புனித வள்ளலுக்கு என்றும் நன்றி! மறவாத நன்றி!!





# ஜெப அப்போஸ்தலத்துவம்



### ஜெப அப்போஸ்தலத்துவத்தின் முதலாவது மூலசக்தி : ஜெபம்.

நமது கிறீஸ்துவர்கள் அணைகடந்ததும் அற்புதமானதுமான ஒரு சக்தியை உடைத்தாயிருக்கிறார்கள் என்று நாம் அவர்களுக்கு எண்பிக்கவேண்டியதிருக்கின்றது. ஏனெனில் இது பற்றி அநேகருக்குச் சற்றேனும் தெரிகிறதில்லை. இவர்களில் ஒவ்வொருவரும் சர்வ வல்லபருடைய தெய்வீக பண்பு ஒன்றில் பங்கு பெறலாம் : அதாவது ஆத்துமங்களுக்கு உயிர் அளிக்கவும், அந்த உயிரை இழந்துபோன பிறகு அதைத் திரும்பப் பெற்றுத் தருவதற்குமான வல்லமையை இவர்கள் அடையலாம்.

நம்மவர்கள் எவ்வளவு பலவீனராயிருந்தாலும் சரி, எத்தகைய பரிதாப நிலையிலிருந்தாலும் சரி, இந்த மேலான வல்லமையை இவர்கள் பிரயோகிக்கக்கூடும். மரித்தவர்களை உயிர்ப்பிப்பதற்கு எவரும் கையாளத்தக்க சுலபமான வழியொன்று இருக்கிறது என்றும், அந்த வழியை பெரும்பாலான மக்கள் அறியமாட்டார்கள் என்றும் வைத்துக் கொள்வோம் : அப்படியாயின் அவ்வழியையும், அதன் பிரயோகத்தையும் யாவருமறிய எடுத்துக் காட்டுவது சிறந்ததோர் பேருபகாரமாகக் கருதப்படுமன்றோ? இவ்விதம் உயிர்ப்பிப்பதற்கான வழியை அநித்திய மரணமாகிய சரீர அழிவைப் பொறுத்தவரை தேவ பராமரிப்பு நமக்கு நல்காதிருப்பினும், நித்திய மரணமாகிய ஆத்தும நாசத்தைப் பொறுத்தவரையில் நமக்கு அருளியிருக்கிறது என்பது நிச்சயம்.

கிறீஸ்துவர்களில் பெரும்பாலோர், தத்துவ ரீதியில் அவர்களுடைய விசுவாசம் எப்பேர்ப்பட்டதாயினும் அனுபவ ரீதியிலென்கிலும், உயிரிழந்த ஆத்துமங்களைக் கல்லறையினின்றும் எழுப்புவதற்கான வல்லமையை பலிபீட பணிக்கு அழைக்கப்பட்டவர்களின் பிரத்தியேக உரிமையாகவே கருதுகின்றனர். இதனால் இவர்கள் ஆத்தும உயிர் எதில் அடங்கியுள்ளது என்றும், இந்த உயிர் பலப்படுவது அல்லது ஒரு முறை தவறினால் அதைத் திரும்பவும் நிலைநிறுத்துவதெப்படி என்றும் கண்டுபிடிக்கிறதில்லை என்று தெளிவாகிறது. இந்த ஞான உயிர் அளிப்பதற்கான வல்லமையை பெற்றுள்ளவர்களில் பெரும்பாலானவர்கள், தங்களுடைய உன்னத பதவியின் மகத்துவத்தைக் கனவிலும் கருதாதிருப்பதினாலேயே, மரணம் இவ்வளவு வெற்றிகரமாக ஆட்சி செலுத்துவதன்றியே, உலகமே ஒரு பரந்த சவக்காடாகக் காட்சியளிக்கின்றது என்றால் இது ஆச்சரியமோ? எனவே இத்தகைய கொடிய அறியாமையினின்றும் அதிலும் கொடிய

கவனமற்ற அசட்டைத்தனத்திலிருந்தும் இவர்களை மீட்கும்படியாக, ஆத்துமத்தின் உயிர் **தேவ வரப்பிரசாதம்** என்பதையும், இந்த தேவ வரப்பிரசாதத்தை ஆத்துமங்களுக்குத் தருவிப்பதற்கான எத்தனம் **ஜெபம்** என்பதையும் விளக்கிக் காட்டுவோம்.

---

# "பாப்பரசரின் பூசைக் கடியாரம்"

## ஜூலை மாதம்

**அடுத்த மாதம் பாப்பரசருக்காக நிறைவேற்றப்படும் பூசை இம்மாதம் 10-ம் தேதிக்குள் நமது காரியாலயத்தில் பதிவாகவேண்டும்.**

ஜூலை மாதம் பாப்பரசருக்காக பூசைப்பலி நிறைவேற்றிவைக்க ஏற்றுக்கொண்டவர்கள்

| நாள் | பூசை செய்கிறவர்கள் அல்லது செய்விக்கிறவர்கள் |
|---|---|
| 1 | நத்தம் பங்கு ஜனங்கள்<br>R. M. S. Thevar, Jubilee House, Srivilliputtur |
| 2 | Holy Cross Anglo-Indian High School, Tuticorin.<br>அர்ச். வியாகுலமாதா மடம், பழைய கோவில், திருச்சி |
| 3 | Rev. Br. Joseph, St. Peter's Seminary, Malleswaram, Bangalore.<br>பூங்காவன சபைப் பெண்கள், அர்ச். வியாகுலமாதா மடம், பழைய கோவில், திருச்சி. |
| 4 | உலக இரட்சகர் மடம், பாலக்கரை, திருச்சி.<br>சற்பிரசாத சபைப் பெண்கள், அர்ச். வியாகுல மாதா மடம், பழைய கோவில், திருச்சி. |
| 5 | 5-ம் வகுப்பு மாணவிகள், புனித தெரசாள் ஆரம்பப்பாடசாலை, வடக்கூர், தூத்துக்குடி.<br>சற்பிரசாத சபைப் பாங்கிகள், அர்ச். வியாகுலமாதா மடம், பழைய கோவில், திருச்சி. |
| 6 | அர்ச். அமலோற்பவமாதா மடம், சவேரியார் பட்டணம்.<br>Holy Cross H. E. School, Tuticorin. |



| நாள் | பூசை செய்கிறவர்கள் அல்லது செய்விக்கிறவர்கள் |
|---|---|
| | புனித ஸ்தனிஸ்லாஸ் ஆரம்பப்பள்ளி, அர்ச். வியாகுலமாதா மடம், பழையகோவில், திருச்சி. |
| 7 | Rev. Fr. Joseph, Holy Ghost Church, Richards Town, Bangalore.<br>அர்ச். அமலோற்பவ மாதா சபைப் பிள்ளைகள், அர்ச். வியாகுலமாதா மடம், பழைகோவில், திருச்சி. |
| 8 | IV A, Holy Cross College High School, Tiruchirapalli. |
| 9 | சிறிய புஷ்ப ஆரம்பப்பள்ளி, வியாகுலமாதா மடம், திண்டுக்கல். |
| 10 | J. V. Cyril, 4th Cross Road, Chamarajpet, Bangalore 2. |
| 11 | J. B. Hoover, No. 36 Sirsie Road, Chamarajpet, Bangalore 2. |
| 12 | T. சாமிநாத பிள்ளை, 27 கோயில் தெரு, பாலக்கரை, திருச்சி. |
| 13 | Holy Cross Convent Community, Tuticorin. |
| 14 | IV B, Holy Cross College High School, Tiruchirapalli. |
| 15 | St. Mary's H. Ele. School, R. C. East gate, Madurai. |
| 16 | C. W. Gould. 8 Sirsie Road, Bangalore 2. |
| 17 | Pius Hoover, No. 36 Sirsie Road, Chamarajpet, Bangalore 2. |
| 18 | Patric Hoover, No. 36 Sirsie Road, Chamarajpet, Bangalore 2. |
| 19 | Elizebeth Hoover, No. 36 Sirsie Road, Chamarajpet, Bangalore 2. |
| 20 | T. சாமிநாத பிள்ளை, 27 கோயில் தெரு, பாலக்கரை, திருச்சி. |
| 21 | புனித தெரசாள் ஆரம்ப பாடசாலை, வடக்கூர், தூத்துக்குடி. |
| 22 | புனித பத்திரிசியார் உயர்தரப் பாடசாலை, பழைகுசவபாளையம், மதுரை. |
| 23 | Mary Hoover, Visvesapuram, Bangalore 2. |
| 24 | R. R. Hoover, Visvesapuram, Bangalore 2. |
| 25 | சம்மனசுக்கள் விடுதி, வியாகுல மாதா மடம், திண்டுக்கல். |
| 26 | St. Ann's Convent, உடன்குடி, திருநெல்வேலி ஜில்லா.<br>Mother Sophie, Holy Cross Convent, Tuticorin. |
| 27 | J. R. C. V. F. P. D. Hoover, Visvesapuram, Bangalore 2. |
| 28 | IV C, Holy Cross College High School, Tiruchirapalli. |
| 29 | V. Cecily, Chamarajpet, Bangalore City |
| 30 | Mr. D. J. Dorairaj, Chamarajpet, Bangalore City. |
| 31 | S. S. Doss Family, Beach Road, Negapatam.<br>R. M. S. Thevar, Jubilee House, Srivilliputtur. |

---






## அர்ச். இஞ்ஞாசியார் மலர்

இவ்வாண்டு ஜூலை மாதம் 31-ம் தேதி அர்ச். இஞ்ஞாசியார் திருநாளன்று அவர் மரித்த 400-ம் ஆண்டு முடிவடைகிறது. ஜெப அப்போஸ்தல சபையின் இலட்சியத்திற்கும் இவ்வர்ச்சியசிஷ்டவரின் இலட்சியத்திற்கும் உள்ள தொடர்பையும் ஒற்றுமையையும் உணர்ந்தவர்களுக்கு இம்மாத திரு இருதயத் தூதன் அர்ச். இஞ்ஞாசியார் மலராக திகழ்வதின் காரணத்தை எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. அர்ச். இஞ்ஞாசியாரின் குறிக்கோள்: "சர்வேசுரனுடைய அதிமிக தோத்திரம்." இக் குறிக்கோளை அவர் தமது வாழ்நாளெல்லாம் சர்வேசுரனுடைய இராச்சியம் இவ்வுலகில் வருவதற்காக உழைப்பதில் நிறைவேற்ற முற்பட்டார். அவரிடம் ஞானப்பால் அருந்தி வளர்ந்த அவருடைய ஞான மக்களிடமிருந்தே ஜெப அப்போஸ்தல சபையும் உதித்தது என்பதை நாம் மறக்கலாகாது. எனவே, அவர் மரித்த நான்காவது நூற்றாண்டு விழாவைக் கொண்டாடு முகமாய் அவருடைய வாழ்க்கையை பல கோணங்களிலிருந்தும் ஆராய்ந்தறிய வசதியளிப்பதால் இம்மலர் ஜெப அப்போஸ்தல சபையின் இலட்சியத்தை வலியுறுத்துவது பற்றி நாம் பெருமிதமடைய வேண்டுமல்லவா?

## பரிசுத்த பாப்பரசரின் புதிய நிருபம்

1856-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 23-ம் நாள் சேசுவின் திரு இருதயத் திருநாள் அகில கத்தோலிக்க திருநாளாக பரிசுத்த தந்தை 9-ம் பத்திநாதரால் ஏற்படுத்தப்பட்டது. இத்திருநாளின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடும்படியாக நமது இன்றைய பாப்பரசர் 12-ம் பத்திநாதர் புதியதோர் நிருபத்தை எழுதியளித்துள்ளார். இந்த நிருபத்தில் நமது பரிசுத்த தந்தை, திரு இருதயத் திருநாளின் நூற்றாண்டு விழாவின் பலனாக உலகமெத்திசையும் திரு இருதயப் பக்தி ஓங்கி வளர வேண்டுமென்று ஆசித்து இப்பக்தி சுபாவத்திற்கடுத்தது அல்லது உணர்ச்சி வசப்பட்டது என குறை கூறித் திரியும் எதிரிகளுக்குத் தகுந்த பதிலளித்துள்ளார். பல தீமைகளுக்குள்ளாகித் துன்புறும் தற்போதைய மனித சமூகம் இரட்சணியமடைய இப்பக்தி சிறந்ததோர் வழி யென்று சுட்டிக்காட்டி இப்பக்தியை நிரூபிப்பதற்கான சான்றுகளை பழைய புதிய ஏற்பாடுகளிலிருந்து தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்.

கூடிய சீக்கிரத்தில் இந்நிருபம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு பிரசுரிக்கப்படுமென்று எதிர்பார்க்கலாம்.

## சேசுவின் விலைமதிக்கப்படாத திரு இரத்தம்

இம்மாத முதல் தேதியன்று நாம் சேசுவின் திரு இரத்தத்தின் திருநாளைக் கொண்டாடுகிறோம் மேலும் இம்மாத முழுவதும் சேசுவின் திரு இரத்தத்திற்கு ஒப்புக்கொடுக்கப்பட்ட மாதம். அவருடைய திரு இரத்தத்தினால் இரட்சிக்கப் பெற்ற நாம் அந்த விலை மதிக்கப்படாத திரு இரத்தத்தின் ஒரு துளி முதலாய் வீணாகாமல் பார்த்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறோம். ஜெப அப்போஸ்தல சபை அங்கத்தினராகிய நாம், இம்மாதம் அவருடைய திரு இரத்தம் பலனளிக்கு முறையில் எவ்வாறு நமது கடமையை நிறைவேற்றுவது என்று எதார்த்தமாகப் பரிசோதித்தறிவது மெத்த நன்று. நமது அனுதின காணிக்கையை எவ்வளவுக்கு கவனத்தோடும், மன உருக்கத்தோடும் சேசுவின் திரு இருதயத்தோடு ஒன்றித்து ஒப்புக்கொடுக்கிறோமோ அவ்வளவுக்கு அதிகமாக அவருடைய திரு இரத்தத்தின் இரட்சணிய பலன் அதிகரிக்கும் என்பதை ஆணித்தரமாக நமது மனதில் பதித்துக் கொள்வோமாக.

## நமது கேடயம்

கண்ணீர்க் கணவாயாகிய இத்துன்ப உலகில், அநேக ஆபத்துக்கள் நம்மைச் சூழ்ந்திருக்கின்றன. ஆபத்துக் காலத்தில் அன்னையல்லவா தஞ்சம்? பயந்த பிள்ளை 'அம்மா, அம்மா,' என்று அலறி தாயை நோக்கி ஓடுகின்றதல்லவா? நம்மைச் சூழ்ந்திருக்கும் ஆபத்துக்களையும் நமது பயந்த உள்ளத்தையும் அறிந்த திருச்சபை நம் சுபாவத்திற்கு ஏற்ப "தாயே தஞ்சம் நீ" என்று அவளை நாம் தேடுவதற்காக தேவதாயின் திருநாட்களை ஒவ்வொரு மாதத்திலும் கொண்டாடி வருகிறது.

ஜூலை மாதத்தில் 2-ம் தேதி வரும் தேவதாய் எலிசபெத்தம்மாளைச் சந்தித்த திருநாளோடு, 16-ம் தேதி கார்மேல் மலை உத்தரிய மாதா திருநாளையும் கொண்டாடுகிறோம். உத்தரியம் நமது தாயின் அன்பு விருதணிகளில் ஒன்று. 1251-ம் ஆண்டு ஜூலை 16-ம் தேதி அர்ச். சைமன் ஸ்தாக் என்பவர் தன் சபையின் இக்கட்டுகளில் மனமுடைந்தவராய் தேவமாதாவின் அடைக்கலத்தைத் தேடி ஜெபித்துக் கொண்டிருக்கையில் பரமநாயகி உத்தரியத்துடன் தோன்றி "இது இரட்சணியத்தின் அடையாளம், ஆபத்துக்களின் கேடயம், எனது விசேஷ உதவியின் அச்சாரம்; இதோ பெற்றுக் கொள்," என்று சொல்லி மறைந்தாள். தேவதாயின் மக்களே! தாயின் ஆபரணத்தை நாம் அணிந்து விளங்குகிறோமா? உலக இடுக்கண்கள் மத்தியில் உத்தரியம் நமது கேடயமாகத் திகழ்கின்றதா? 'உத்தரிய மாதாவே, எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்,' என்று அடிக்கடி இம்மாதத்தில் ஜெபிப்போமாக!

## புதிய அம்சம்

வெகு நாளாக பல இடங்களிலிருந்தும் வந்த மறுக்க முடியாத விண்ணப்பத்தின் மேல், வழக்கமாக தூதனின் தொடக்கத்தில் பிரசுரிக்கப்படும் மாதாந்தர பஞ்சாங்கத்தை விரிவுபடுத்த முன் வந்துள்ளோம். இதைத் தொடர்ந்து நடத்துவது தூதன் வாசகர்களுக்கு இது எவ்வளவு பயனளிக்கிறது என்பதை பொறுத்திருக்கிறது. உங்கள் அபிப்பிராயங்களை எழுதத் தவறாதீர்கள்.




**விசுவாசப் பரம்புதல் சபை :** சென்ற ஆண்டு விசுவாசப் பரம்புதல் சபைக்காகக் கொடுக்கப்பட்ட தொகை குறிப்பிடத்தக்க முறையில் அதிகரித்துள்ளது. அதிகப்படியாக பணம் வசூலித்த நாடுகள்: அமெரிக்கா, கானடா, மெக்சிகோ, பிரசில், பிரான்ஸ், ஜெர்மனி, அயர்லாந்து, இத்தாலி, ஸ்பெயின். இத்தொகையிலிருந்து 50,00,000 பவுன்கள் வேதபோதக நாடுகளுக்கு அனுப்பப்பட்டுள்ளது.

**அகில இந்திய கத்தோலிக்கக் கல்லூரி மாணவர் சங்க** மாநாடு அண்மையில் பங்களூரில் நடைபெற்றது. அச்சந்தர்ப்பத்தில் பரிசுத்த பிதா 12-ம் பத்திநாதர் மாநாட்டிற்கு தமது வாழ்த்துச் செய்தியை அனுப்பினர். கத்தோலிக்கக் கல்லூரி மாணவர் தமது அறிவையும் விசுவாசத்தையும், சர்வேசுரனுடைய அதிமிக தோத்திரத்திற்காகவும், நாட்டின் நலனுக்காகவும் நன்கு பயன்படுத்துமாறு கேட்டுக்கொள்கிறார்.

**மெடிக்கல் மிஷன் சகோதரிகள் :** சென்ற வருடம் 5,00,000-க்கு மேற்பட்ட வியாதியஸ்தர்கள் மெடிக்கல் மிஷன் சகோதரிகளிடமிருந்து சிகிச்சை பெற்றனர். இந்தியா, இந்தோனீசியா, பாக்கிஸ்தான் நாடுகளிலிருந்து 318 மாணவிகள் இவர்களிடமிருந்து சிகிச்சை செய்யக் கற்றுக்கொண்டனர். இந்த சகோதரிகள் இந்தியாவில் இரண்டு புதிய மருத்துவசாலைகளைத் தொடங்கியிருக்கின்றனர்.

**அமராபுரத்தில் புதிய கத்தோலிக்க மருத்துவசாலை :** அமைச்சர் காளா வெங்கட்ராவ் ஆந்திர நாட்டில் அமலாபுரத்தில் கத்தோலிக்க மருத்துவசாலையின் அடிப்படைக் கல்லை நாட்டினர். விழாவின்போது நிகழ்த்திய சொற்பொழிவில், மிஷனரிமார்களின் சேவையைப்போற்றி, அவர்களுடைய சுயநலமற்ற முயற்சிக்கு எல்லோரும் ஆதரவு தரவேண்டுமென்று வற்புறுத்தினர்.

**'பிளிட்ஸ்'-இன் அண்டப் புளுகு :** இந்திய கத்தோலிக்கரின் நாட்டுப்பற்றை ஒழிக்கும் நோக்கத்துடன் மேற்றிராணிமார்களுக்கெல்லாம் இரகசிய சுற்றறிக்கை ஒன்று வத்திக்கானிலிருந்து வந்துள்ளது என்று பம்பாயிலிருந்து வெளிவரும் 'பிளிட்ஸ்' என்னும் இடதுசாரி பத்திரிகை ஓர் அண்டப் புளுகைக் கட்டிவிட்டது. மேற்படி பத்திரிகையின் போக்கைக் கண்டித்து, அவ்வித சுற்றறிக்கை ஒன்றும் வரவில்லையென்று மேன்மை



தங்கிய கர்தினல் கிராசியாஸ் அதிமேற்றிராணியார் அதிகாரபூர்வமாக வெளியிட்டுள்ளார்.

**வர்துமன் நகர் :** வர்துமன் நகர் அட்டூழியம் சம்பந்தமாக நடைபெற்ற வழக்கில் தீர்ப்புச் சொல்லப்பட்டது. குற்றஞ்சாட்டப்பட்ட 10 பேரில் 9 பேர் உண்மையாகவே குற்றவாளிகள் என்று பதாக் என்ற மாஜிஸ்டிரேட் தீர்ப்புச் சொன்னர். இவர்கள் எல்லோரையும் பலமாத கடுங்காவல் தண்டனைக்குத் தீர்ப்பிட்டார்.

**மனு தள்ளுபடி செய்யப்பட்டது :** மே மாதம் 10-ம் தேதி நியோகி குழுவின் அறிக்கையை வெளியிடக்கூடாதென்று தற்காலிகமாகத் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. மீண்டும் மே மாதம் 28-ம் தேதி வழக்கு நீதிமன்றத்துக்கு வந்தபொழுது மத்திய பிரதேச அரசாங்கத்தைச் சார்ந்த வழக்கறிஞர், நியோகி குழுவின் அறிக்கையை உடனே வெளியிடாவிடில் பொதுநலத்திற்கு ஊறுவிளையும் என்று வாதாடினர். அதற்குமேல், நீதிபதி சின்ஹ, G. X. பிரான்சீஸ் உடைய தடையுத்தரவு மனு தள்ளுபடி செய்யப்பட்டது என்று தீர்ப்பிட்டார்.

**தூதுவர் பரிமாற்றம் :** இஸ்பானியா நாட்டோடு தூதுவர் பரிமாற்றிக்கொள்ள இந்தியா தீர்மானித்துள்ளது. இந்தியாவின் முதல் தூதுவராக ஓர் பிரபல கத்தோலிக்கத் தலைவர் நியமிக்கப்படலாம். இஸ்பானியா அரசாங்கத்தைப்பற்றி நேருபோன்றவர்களுக்கு அபிப்பிராய பேதமிருந்த போதிலும், போர்த்துக்கீசிய சிக்கலினிமித்தம், இஸ்பானிய நாட்டுடன் தூதுவர் பரிமாற்றிக்கொள்வது உசிதமென்று டில்லியில் கருதப்படுகிறது.

**பாக்கிஸ்தானில் ஹாரிஸ் இனத்தைச் சேர்ந்த கத்தோலிக்கர்** படும் அவதியைக் கண்டு பரிசுத்த பிதா வருத்தம் தெரிவித்தார். இவர்கள் பாரம்பரையாக சாகுபடி செய்த நிலங்களைப் பிடுங்கி முகம்மதியருக்கு அளித்திருக்கிறார்கள். பாக்கிஸ்தான் அரசாங்கம் ஆவன செய்து இவர்களுக்கு நியாயம் வழங்கவேண்டுமென்ற தம் கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

**ஆசிரியர் தியாகம் :** தென் ஆப்பிரிக்காவில் தனிப்பட்டோரால் நடத்தப்படும் கல்வி நிலையங்களுக்கு அரசாங்கம் நிதி உதவி மறுக்கப்பட்டதிலிருந்து, கத்தோலிக்குப் பள்ளிக்கூடங்கள் மிகவும் நெருக்கடியான நிலையை அடைந்துள்ளன. இந்த சங்கடமான நிலைமையை சமாளிக்க பத்து வட்சம் பவுன்கள் கல்வி நிதியாகத் திரட்ட தென் ஆப்பிரிக்க கத்தோலிக்கர் முயற்சி செய்து வருகின்றனர். கத்தோலிக்க ஆசிரியர்கள், தங்கள் சம்பளத்தில் 25 சதவிகிதம் வெட்டுவிழுந்தபோதிலும், பெரும்பாலும் தங்கள் வேலையைத் தொடர்ந்து செய்து வருகின்றனர்.

**லெபனன் நாட்டில் கல்விப் பிரச்சினை :** லெபனன் நாட்டு அரசாங்கம், நிதி உதவி மறுத்தும் இன்னும் மற்ற இடையூறுகளைச் செய்தும் தனிப்பட்டோரால் நடத்தப்படும் கல்வி ஸ்தாபனங்களை நிறுத்தப்பார்க்கிறது. இதற்குத் தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க, கத்தோலிக்கப் பள்ளிகளெல்லாம் மூடப்பட்டுள்ளன.

**இந்தோனீசியப் பாராளுமன்றம் :** 260 உறுப்பினர்களைக்கொண்ட இந்தோனீசியப் பாராளுமன்றத்தில் 7 கத்தோலிக்கரும் 8 புராட்டஸ்டாண்டாரும் இடம்பெற்றிருக்கின்றனர். இந்தியப் பாராளுமன்றத்தில் 500 உறுப்பினர் இருந்தபோதிலும் 10 கிறீஸ்துவர்கள்கூட இடம்பெறவில்லை. இந்தோனீசிய அமைச்சர் அவையில் 4 கிறீஸ்துவர்கள் பதவி வகிக்கின்றனர். இவர்களில் கத்தோலிக்கராகிய சோகார்டி, தெ ரொசாரி என்போர் விவசாயத்துறை, போக்குவரத்துத் துறைகளில் முறையே அமைச்சராயிருக்கின்றனர்.

**ஆப்பிரிக்க மேதை காலமானர் :** டாக்டர் ஆதிரியன் ஆத்திமன் 90-வது வயதில் காரேமா என்ற இடத்தில் நன்மரணமடைந்தார். இவர் சூடான் பிரதேசத்தில் டின்டிர்மா என்றவிடத்தில் பிறந்தவர். சிறுவராயிருக்கும்போது இவரை துவாரெக் என்னும் இனத்தவர் பிடித்து அடிமையாக்கினர். கர்தினல் லாவிஜரீ என்பவர் இவரை மீட்டு மருத்துவக்கலை படிக்கச் செய்தார். படிப்பு முடிந்ததும் தங்கநீக்கா பகுதியில் வைத்தியமும் வேதபோதகமும் போற்றத்தக்க முறையில் செய்து பல பதக்கங்களைப் பெற்ருர். பல பாப்புமார்களுடைய பாராட்டுதல்களுக்கும் உரியவரானர்.

**முகம்மதியர் கத்தோலிக்கர் கைகலப்பு :** ஜோர்டன் நாட்டில் மடாபா என்றவிடத்தில் கத்தோலிக்கருக்கும் முகம்மதியருக்குமிடையே ஏற்பட்ட கலவரத்தில் மூன்று முகம்மதியரும் இரு கத்தோலிக்கரும் மரணமடைந்தனர். 30 முகம்மதியரும் 13 சத்தோலிக்கரும் காயமடைந்தனர். ஜோர்டன் மன்னர் குஸ்ஸேய்ன் அமைதியை நிலைநாட்ட முயற்சி செய்து வருகிருர்.

**கன்னியர் மடம் தீக்கிரையானது :** மே, 15-ல் கானடா நாட்டில் ஆர்லியன்ஸ் நகரத்திலுள்ள ஓர் கன்னியர் மடத்தின்மீது இராணுவ விமானமொன்று மோதி தீப்பற்றி எரிந்தது. கன்னியர், குருக்கள், விமானமோட்டிகள் உட்பட சுமார் 25 பேர் உயிர்நீத்தனர்.

**எட்டுப் பிள்ளைகளும் குருக்கள் :** தங்களுடைய எட்டுப் புதல்வர்களும் குருப்பட்டம் பெறும் பாக்கியத்தை அடைந்துள்ளவர்கள் இங்கிலாந்திலுள்ள ஓகாரா தம்பதிகள். கடைசிப் பிள்ளையான சங். கொன்லெத் ஓகாரா என்பவர் சிலவாரங்களுக்கு முன்தான் குருப்பட்டம் பெற்ருர். அவ்வமயம் அவரது பெற்ரேரும் உலகத்தின் பல பாகங்களிலுமிருந்து கூடிய குருக்களான அவருடைய ஏழு சகோதரர்களும் பிரசன்னமாயிருந்து வைபவத்தைச் சிறப்பித்தார்கள்.





# திரு இருதய ஆசீர்வாதம்

***நன்றியறிந்த ஸ்தோத்திரங்களைப் பிரசுரிப்பதற்கு குறிப்பிட்ட கட்டணம் இல்லை.***

***நேயர்கள் அனுப்பும் நன்கொடையை பெற்றுக்கொண்டு விஷயத்தை சுருக்கமாக பிரசுரிப்போம்.***

---

**Kati :**—என் தங்கை ரோஜ் லீனுவுக்கு விவாகம் ஆகும்படிக்கும் என் குடும்பத்தில் நித்திய சமாதானம் உண்டாகும்படிக்கும் நான் நினைக்கும் காரியம் ஜெயமாகும்படிக்கும் சேசுவின் திரு இருதயத்தை மன்ருடுகிறேன். **N. R. Moholla Mysore :**—என் மகன் தும்ர்வாதம் போன்ற வியாதியினுல் பீடிக்கப்பட்டு அற்புதவசமாய் சுகம் கண்டதற்கு எங்கள் மனமார்ந்த நன்றி. **Nagalapuram :**—ஏழைகளின் ஏந்தலாகிய கிறீஸ்துராஜாவின் கருணையால் எங்களின் குடும்பம் அடைந்த சகல நன்மைகளுக்காகவும் நன்றி. மேலும் நாங்கள் நினைத்த காரியங்கள் அனுகூலமாகவும் நாங்கள் என்றென்றும் கிறீஸ்துவில் ஜீவிக்கவும் ஆண்டவர் அருள்புரிவாராக. **இடைக்காட்டூர் :**—சேசுவின் திரு இருதய ராஜா இரக்கத்தாலும், அர்ச். சகாய மாதா மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் மூலமாய் என் வீடு புயலினுல் சேதமடைந்தாலும் சுவர் விழுகாதபடி காப்பாற்றினதற்கும் நான் கேட்ட மன்ருட்டுகள் அனுகூலமானதற்கும் நன்றி. இன்னும் நான் நினைக்கும் காரியம் அனுகூலமாக சேசுராஜா உதவி புரிவாராக. **Pugalur :**—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும், அர்ச். சூசையப்பர் அர்ச். சவேரியார் இவர்கள் மன்ருட்டாலும் என் மகன் பரீட்சையில் தேர்ச்சியானதற்கு என் மனமார்ந்த நன்றி. என் மனைவிக்கு பூரண சுகம் கொடுக்க இருதய சேசுவை வேண்டிக் கொள்கிறேன். **சென்னை, சந்தோம் :**—திரித்துவ தேவனின் கிருபையாலும் தேவதாய் மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் மன்ருட்டாலும் என் மகன், மனைவி வைசூரியிலிருந்து அற்புதமாக சுகமானதற்கு நன்றி. **புதுவை :**—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் மாதாவின் மன்ருட்டாலும் எனக்கு சுக பிரசவம் கிடைத்ததற்கும் வயிற்று வலி நீங்கினதற்கும் நன்றி செலுத்துகிறேன். இன்னும் எனது காரியங்கள் யாவும் அனுகூலமாகும்படி சேசுவின் திரு இருதயம் கிருபை செய்வாராக. **கீழக்கரை :**—என் குழந்தைக்கு வந்த கொடிய வயிற்றிளைச்சல் பூரண சுகமானதற்கு சேசுவின் திரு இருதயத்திற்கு என் நன்றி. **வலையப்பட்டி :**—நாங்கள் பெற்றுக் கொண்ட சகல உபகாரங்களுக்கு சேசுவின் திரு இருதயத்திற்கு நன்றி. இன்னும் நாங்கள் நினைக்கும் காரியங்கள் அனுகூலமாக மன்ருடுகிறோம். **Kumara Perumal Vilai :**—சேசுவின் திரு இருதயத்தின் உதவியாலும் அர்ச். அந்தோனியார் முதலிய சகல அர்ச்சியசிஷ்ட

வர்களின் மன்றாட்டினாலும் சென்ற வருடம் பாஸ் பண்ணினதற்கு நன்றி. இன்னும் நான் நினைத்திருக்கும் காரியங்கள் அனுகூலமாகவும், இவ்வருடம் எழுதின பரீட்சையில் வெற்றியடையவும் சேசுவின் திரு இருதயம் அருள் புரிவாராக. **Kati** :—நான் கோரிய சில காரியங்கள் அனுகூலமானதற்கு நன்றி. இன்னும் சில சந்தர்ப்பங்கள் அனுகூலமாகவும் என் தங்கைக்கு கூடிய விரைவில் விவாகம் ஆகவும் குடும்பத்தில் சமாதானம் நிலவவும் மன்றாடுகிறேன். **Pondicherry** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தினாலும் அர்ச். ஆரோக்கிய மாதா, அர்ச். செபஸ்தியார் மன்றாட்டினாலும் என் மகனுக்கு வந்த வைசூரி சௌக்கியமானதற்கு நன்றி. என் மகள் கல்யாணம் நல்ல விதமாய் முடியவும் நான் கேட்கும் காரியம் அனுகூலமாகவும் மன்றாடுகிறேன். **Koramandal. K. G. F.** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் தேவதாய் அர்ச். சூசையப்பர் மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் மன்றாட்டாலும் நான் அடைந்த சகல உபகாரங்களுக்கும் என் குமாரர் பரீட்சையில் தேறினதற்கும் நனறி. **Pondicherry** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் அர்ச். தேவமாதா சகல அர்ச்சியசிஷ்டவர்கள் மன்றாட்டாலும் எனக்கும் என் மகனுக்கும், மகளுக்கும், வேலை கிடைத்ததற்கு நன்றி. இன்னும் எங்களுக்கு நல்ல சுகத்தை கொடுக்கும்படியாகவும் நான் கேட்கும் மன்றாட்டு அனுகூலமாகவும் மன்றாடுகிறேன். **Atur** :—எனக்கு வந்த இருதய நோய், நரம்பு கோளாறு நெஞ்செரிச்சல், ஈரல் வலி மற்றும் பல கொடிய வியாதிகள் திரு இருதய தூதனில் பிரசுரிப்பேன் என்று நேர்ந்ததின் பேரில் சுகம் ஆகி வருகிறது. இன்னும் பூரண சுகம் தர தேவதாய் மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் வழியாய் சேசுவின் ஆசீரை கெஞ்சி மன்றாடுகிறேன். **ஈப்போ** :—அநேக நாளாய் இருக்கும் இருமல், இக்குடும்பத்தில் இருக்கும் கஷ்டங்கள் நீங்கவும், என் பேத்தி பரீட்சையில் பாஸ் ஆகவும், சேசுவின் திரு இருதயத்தையும், அர்ச். ஆரோக்கிய மாதாவையும், மற்றும் சகல அர்ச்சியசிஷ்டவர்களையும் உத்தரிக்கிற ஆத்துமாக்களையும் கெஞ்சி மன்றாடுகிறேன். **Kati** :—நான் கோரின காரியம், அனுகூலம் அடைந்ததற்கு என் நன்றி. இன்னும் அவசரமான காரியங்கள் ஜெயமாகும்படி மன்றாடுகிறேன். **Egmore, Madras** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தால் என் ஐந்தாவது மகன் இஞ்சினியர் பரீட்சையில் முதல் வருடம் தேறினதற்கு நன்றி. இன்னும் 3 வருடமும் தவறாமல் பாஸ் பண்ணவும், என் நாலாவது மகனுக்கு நல்ல வேலையை கொடுத்து அவன் காரியத்தை ஒழுங்கு செய்யும்படியாகவும் என் முட்டிக் காலில் இருக்கும் வலியை தீர்க்கும்படியாகவும் மன்றாடுகிறேன். **பம்பாய்** :—நாங்கள் நினைத்த காரியம் அனுகூலமானதற்கும், எங்களுக்கு செய்து வரும் எண்ணிக்கையற்ற உபகாரங்களுக்கும், சேசுவின் திரு இருதயத்திற்கும் அர்ச். உபகார மாதாவுக்கும் நன்றி. இந்த மாதம் நாங்கள் எதிர் பார்க்கும் உதவிகளும், நினைத்த காரியங்கள் அனுகூலமாகவும் என் தங்கைக்கு நடக்கும் ஆப்ரேஷன் யாதொரு இடைஞ்சலும் இல்லாமல் நல்ல விதமாக முடியவும் மன்றாடுகிறோம். **Royapuram, Madras** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தினாலும், அர்ச். சூசையப்பர் மன்றாட்டினாலும் பூரண சுகத்துடன் வேலைக்கு போய் வரும்படி உதவி புரிந்ததற்கும் என் இரண்டாவது மருமகளுக்கு சுகப்பிரசவமானதற்கும் நன்றி. **Kemps Town—Tiruchy** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தினாலும் அர்ச். பாத்திமா மாதா மற்றும் அர்ச்சிய

சிஷ்டவர்கள் மன்றாட்டினாலும் எனக்கு வந்த வியாதி சுகமானதற்கும் இன்னும் செய்துள்ள சகல உபகாரங்களுக்கும் நன்றி. இன்னும் நினைத்த காரியங்கள் அனுகூலமாகவும் குடும்பத்தில் நல்ல சுகம் கொடுத்து காப்பாற்றவும் மன்றாடுகிறோம். **திருச்சி** :—என் கடைசி குமாரன் S. S. L. C. பரீட்சையில் தேர்ச்சி பெறறதற்கு நன்றி. அவன் பெரிய படிப்பு படித்து குருவானவராக வரம் பெறவும், என் மூத்த குமாரத்தி சுகத்துடன் M. B. B. S. பரீட்சையை ஒழுங்காக படித்து முடிக்கவும் என் கணவர் சீர் பெறவும் என் மூத்த குமாரர் இருவர்களும் தொழில் முன்னேற்றமடைந்து குடும்பத்திற்கு உதவியாக இருந்து ஓர் ஜீவியத்தை தெரிந்து கொள்ளவும் அருள்புரிவாராக. **காரைக்கால்** :—எனது அக்காள் ஜெயமரிக்கு சிறு வயதில் ஏற்பட்ட வயிற்று கோளாறினால் ஆகார குழாயின் ஒரு பாகமும் சுருங்கி 2½ வருஷம் பால், பழம், சிறிது இட்லி போன்ற மெல்லிய ஆகாரம் தவிர ஒரு சாதம் சாப்பிட்டாலும் உயிர் பிரிவது போன்ற மூச்சு திணறல் அதிகமாகி கஷ்டப்பட்டு டாக்டரும் கைவிட்ட பின் முத்திப்பேறு பெற்ற அன்னமரி ஜாவஹி என்பவரிடம் வேண்டிக் கொண்டதின் மேல் தற்போது சுலபமாக சாதம் சாப்பிட முடிகிறது. நன்றி. **Kedar** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் பரிசுத்த லூர்து அன்னை அர்ச். தோமையார் மன்றாட்டாலும் என் தாயாருக்கு வந்த வியாதி நீங்கினதற்கு நன்றி. இன்னும் பூரண சுகமடையவும் நினைத்த காரியம் ஜெயமடையவும் மன்றாடுகிறேன். **மொட்டத்தாதன்விளை** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் அர்ச். அந்தோணியார் மற்றும் சகல அர்ச்சியசிஷ்டவர்களின் அனுக்கிரகத்தாலும் என் மகனுக்கு காலில் வந்த வியாதி குணமானதற்கு மனமுவந்த நன்றி. இன்னும் பூரண சுகம் கிடைக்கவும் நாங்கள் நினைக்கும் காரியங்கள் நிறைவேறவும் தேவரீரை மன்றாடுகிறேன். **சென்னை, மைலை** :—திரு இருதய இரக்கத்தாலும் அர்ச். ஆரோக்கிய மாதா மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் வேண்டுதலாலும் நாங்கள் பெற்றுக் கொண்ட உபகாரங்களுக்கு நன்றி. எங்கள் குடும்பத்திலுள்ள கடின வியாதிக்காரருக்கு சுகமும் எங்கள் மகன் நல்ல பிள்ளையாகி இவ்வருடம் பரீட்சையில் சித்தி பெற கிருபை செய்யும்படி சேசு ராஜாவை கெஞ்சி மன்றாடுகிறேன். **வெல்லிங்டன்** :—சேசுவின் திரு இருதயம் எனக்குச் செய்து வரும் சகல உபகாரங்களுக்கும் என் பிள்ளைகள் அனைவரும் இறுதி தேர்வுகளில் வெற்றி பெற்றமைக்கும் நன்றி. இன்னும் நான் நினைத்திருக்கும் சகல காரியங்களும் முழு வெற்றியுடன் முடிய மன்றாடுகிறேன். **Calicut** :—இந்த மாதம் பூராவும் எங்களுக்கு யாதொரு பொல்லாப்பின்றி காப்பாற்றியதற்கு எங்களின் தாழ்மையான நன்றி. இன்னும் நாங்கள் கேட்கும் காரியங்கள் யாவும் கிடைக்கும்படி சேசுவின் திரு இருதயம் அருள்புரிவாராக. **Malacca** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தினாலும் தேவதாய் அர்ச். அந்தோணியார் உதவியாலும் எங்கள் மூத்த குமாரன் இவ்வருடம் பரீட்சையில் தேறியதற்கு எங்கள் நன்றி. அதோடு அவன் அடுத்த வருடம் தன் கடைசி பரீட்சையில் நல்ல படியாக தேறவும் எங்கள் சிறிய மகளுக்கு கூடி வரும் கல்யாணம் யாதொரு விக்கினமில்லாமல் முடியவும், எங்கள் சிறிய மகன் இவ்வருடம் கடைசியில் எழுதும் பரீட்சையில் நன்கு தேறவும் மன்றாடி வருகிறோம். **திருடி** —என் குழந்தைக்கு ஏற்பட்ட காய்ச்சல் சேசுவின் திரு இருதயம் [illegible] தேவதாய் அர்ச். அந்தோணியார் உதவியால் குணமடைந்ததற்கு

நன்றி. Varaganery-Tiruchy :—அர்ச். லூர்து மாதா வேண்டுதலி ஞல் எனக்கு வந்த காது மந்தம் முக்கால்வாசி சௌக்கியம். இன்னும் முழு வதும் சௌக்கியமாக மன்ருடுகிறேன். Si. Nammiandal :—திரு இருதய அணைகடந்த வேண்டுதலிஞல் என் சகோதரன் S. S. L. C. பாஸ் செய்ததற்கு எனது நன்றி. மேலும் எங்கள் குடும்ப காரியங்கள் சுலபமாய் முடிய வேண்டுகிறேன். **காரைக்கால்** :—திரு இருதய இரக்கத்திஞல் எனது 3 மகளுக்கும் சுகப் பிரசவமாகி அவர்களுடைய கஷ்டங்கள் நீங்கின, எனக்கு வந்த ஆபத்துக்கள் நீங்கின. பேரப் பிள்ளைகளுக்கு வந்த நோய்கள் சுகமாகின, எனது மருமகனுக்கு வேலை கிடைத்தது. என் மனமார்ந்த நன்றி. இன்னும் நான் நினைத்திருக்கும் காரியம் நிறைவேறும்படி உதவி புரிவா ராக. **மதராஸ்** —திரு இருதய இரக்கத்திஞல் எனது வயிற்றிலுள்ள நோய்கள் சுகமாயின, என புருஷனுக்கு வேலை கிடைத்தது, எனக்கு சுகபிர சவமாகி, எனது மைத்துனர் மகளுக்கு வந்த நோயும் என் பிள்ளைகளுக்கு வந்த நோயும் சுகமாயின. என் மனமார்ந்த நன்றி. இன்னும் நான் நினைத்த காரியம் அனுகூலமாகும்படியாகவும் என் பிள்ளைகளுக்கு நல்ல புத் தியும் தெய்வ பக்தியும் எனக்கு சுகபிரசவமாகும்படியாகவும் வேணடுகிறேன். **பிரிட்டோ காலனி, கோ. புதூர், மதுரை** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் தேவதாயின் மன்ருட்டாலும் என் மனைவிக்கு சுகப் பிரசவ மானதற்கும், என்னை சகல ஆபத்து துன்பங்களிலிருந்து காப்பாற்றியதற் கும் நன்றி. இன்னும் என் குடும்பத்தை ஆசீர்வதிக்கும்படியாகவும் எங் களுக்கு நேரும் சகல ஆபத்து துன்பங்களிலிருந்து தற்காத்து இரட்சிக்கும் படி, தேவதாய், அர்ச். சூசையப்பர், அர்ச். செபஸ்தியார் இவர்கள் மூல மாய் சேசுவின் திரு இருதயத்தை மன்ருடுகிறேன்.

---

## 5-வது வருட மரண ஞாபகம்

**ஷவலியர் ஐ. எக்ஸ். பெரைரு**

**கொழும்பு**

*இறப்பு : 21, ஜுலை 1951*

*" என்னை ஜீவியத்தில் நேசித்தவர்களே*
*என்னை மரணத்தில் மறக்காதீர்கள்."*

இதை வாசிக்கும் சங். குருக்களே, கன்னியர்களே, பந்து மித்திரர்களே ! இவ் வாத்தும இளைப்பாற்றிக்காக வேண்டுமோறு தயவுடன் கேட்டுக்கொள்கிறோம்.

கொழும்பு } **மனைவி, மக்கள், மருமக்கள்**
**பேரப்பிள்ளைகள்**

**R. I. P.**

---

**Printed at the De Nobili Press, De Nobili Press P.O. (Madurai Dt.)**
**Edited by Rev. Fr. J. Diaz s.j. and Published by Rev. Fr. M. D. John s.j.**
**St. Mary's P. B. 56, Madurai.**

# இனும்! தூதனுக்குப் புதிய சந்தாதாரைச் சேர்த்துக்கொடுங்கள்.

...ங்களில்...4 புதிய சந்தாதாரைச் சேர்ப்பவர்களுக்கு
அவர் அரசாள வேண்டும்

6 புதிய சந்தாதாரைச் சேர்ப்பவர்களுக்கு
கவியும் ரோஜாவும் அல்லது இன்ப சாகரம்

9 புதிய சந்தாதாரைச் சேர்ப்பவர்களுக்கு
' உள்ளக் கொள்ளை '

12 புதிய சந்தாதாரைச் சேர்ப்பவர்களுக்கு
சவேரியார் சரித்திரம்

15 புதிய சந்தாதாரைச் சேர்ப்பவர்களுக்கு
திருக்குடும்பப் பக்திமாலை

★ தூதன் அளிக்கும் பரிசுகள் இவை!

திரு இருதயத்தூதன், செயின்ட் மேரீஸ், P. B. 56, மதுரை

---

## அர்ச். இஞ்ஞாசியார் மரணமடைந்த 4-ம் நூற்றுண்டு

விழா கொண்டாட்டத்தின்போது வாசிக்கத்தகுந்த நூல்கள்

**அர்ச். இஞ்ஞாசியார் வாழ்க்கை வரலாறு** — ஆக்கியோன் : ஜே. எம். ஞானதிக்கம் சே.ச.

316 பக்கங்கள் கொண்ட இந்நூல், அர்ச்சியசிஷ்டவரின் வாழ்க்கையையும் அவர் ஆற்றிய தொண்டுகளையும் விரிவாக எடுத்துரைக்கின்றது. மதுரை அதிமேற்றிராணியார் ஆண்டவரின் முன்னுரை கொண்டது.

விலை ரூ. 2—0—0 (தபாற் செலவு பிரத்தியேகம்.)

மானேஜர்,

திரு இருதயத்தூதன்,

செயின்ட் மேரீஸ், த. பெ. 56, மதுரை.

Regd. No. M. 1533

